உ

குமரா முருகா குக ஓம் சரணம்





# ஈப்போ அருணகிரிநாதர் மன்றம்









## அருணகிரிநாதர் விழா 2012

# சிறப்பு மலர்

1-1-2012

அருள்மிகு தெண்டாயுதபாணி ஆலய மண்டபம்
(செட்டியார் கோவில்), ஈப்போ





## ஈப்போ அருணகிரிநாதர் மன்றத் தலைவர்
## டாக்டர் வ. ஜெயபாலன் அவர்களின் செய்தி



அந்தாதி இல்லா இறைவனுக் கந்தாதி அன்றுரைத்தும்
நந்தா வகுப்பலங் காரம் அவற்கே நனிபுனைந்தும்
முந்தா தரவில் அவன்புகழ் பூதியும் முற்றுஞ் சொன்ன
எந்தாய் அருண கிரிநாத என்னைநீ ஏன்றருளே. - வ.சு.செ

அன்புடையீர் வணக்கம்,

நமது அருணகிரிநாதர் மன்றத்தினரின் முயற்சியில், மூன்றாவது ஆண்டாக நடைபெறவிருக்கும் “அருணகிரிநாதர் விழா“, சிறப்புடன் நடந்தேற உதவி செய்த அனைத்து நல்லுள்ளங்களுக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றிகள்.

ஆங்கில ஆண்டு முதல் நாள் என்றால் “அருணகிரிநாதர் விழா“ என்ற உணர்வு ஈப்போ நகர் வாழ் தமிழ் மக்கள் அனைவரும் வரவேண்டும். நல்ல தமிழ் இசை, நாட்டியம், சொற்பொழிவு நிகழ்வுகள் என்று முழு நாளுக்கு முத்தமிழ் நாள் விழாவாக, அருணகிரிநாதர் அருளிய பக்தி இலக்கியங்களை மக்களுக்கு பரப்பும் விழாவாக, இந்த விழா அருணகிரிநாதர் அமைந்துள்ளது.

இவ்வருடம் தமிழ் தந்த கடவுள் முருகனைப் பற்றியும், அருணகிரிநாதரைப் பற்றியும் பல செய்திகளைத் தாங்கிய இந்த சிறப்பு மலரை வெளியிடுவதில் பெருமை கொள்கிறோம். இம்மலரை உருவாக்குவதற்கு நமக்குத் துணை செய்த திரு. இரத்தின. மனோகரன், கவிஞர் வே. மகேந்திரன், நல்லரசன் பதிப்பக திரு. இரா. தமிழரசன், திருமதி ச. இராஜேஸ்வரி, சித்தியவான் திரு. மா. திருநாவுக்கரசு மற்றும் விளம்பரங்கள் நல்கிய அனைத்து நல்லுள்ளங்களுக்கும் நம்முடைய நெஞ்சார்ந்த நன்றி.

“குமரா முருகா, குக ஓம் சரணம்”

அன்புடன்
**டாக்டர் வ. ஜெயபாலன்**





## நற்பணிச் செம்மல், கலைக்காவலர்
## டத்தோ லே. தமிழ்ச்செல்வன் அவர்களின்
## வாழ்த்துச் செய்தி

ஈப்போ மாநகரில் கடந்த இரண்டு ஆண்களாக தமிழ்க்கடவுள் முருகன் மீது பாமாலை சூட்டிய திருஞானவள்ளல் அருணகிரிநாதர் பெயரில் மன்றம் அமைத்து திருப்புகழை அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் சீரிய முயற்சியை மேற்கொண்டுள்ள ஈப்போ அருணகிரிநாதர் மன்றத்தின் செயல்பாடுகளை எண்ணி எனது உள்ளம் உவகை கொள்கின்றது.

இவ்வாண்டு விழா மன்றத் தலைவர் எனது அன்புக்குரிய மகப்பேறுவள்ளுனர் டாக்டர் வ. ஜெயபாலன் தலைமையில் நடைபெறும் வேளை இவ்விழா சிறக்க அவரோடு இணைந்து செயலாற்றும் அனைத்து செயலவையினருக்கும் எனது வாழ்த்தினை கூறுவதில் மிக்க மகிழ்ச்சி!

"மேன்மைக்கொள் சைவநீதி
விளங்குக உலகமெல்லாம்"

அன்புடன்
**டத்தோ லெ. தமிழ்ச்செல்வன்**





### பேரா மாநில மஇகா தலைவரும்,
### பேரா மாநில முதல்வரின் சிறப்பு ஆலோசகருமான
### மதிப்புமிகு டத்தோ சு.வீரசிங்கம் அவர்களின்
### வாழ்த்துரை

இசைப்பாடல்களால் இறைவனை வழிப்பட்டு, அப்பாடல்களின் மூலம் பல அரிய தத்துவங்களையும், நிஜங்களையும் நமக்கு அறிவுறுத்திய பெரியோர்கள் பலர். அவர்களில் ஒருவர் முருகப்பெருமானின் திருவருள் பெற்றவராகிய அருணகிரிநாதர் என்னும் இயலிசை புலவர். அன்னவருக்கு அருணகிரிநாதர் மன்றத்து உறுப்பினர்கள் 3ஆம் ஆண்டாக விழா எடுத்திருப்பது பாராட்டிற்குரியது. இவ்விழாவிற்கு சிறப்பு மலர் வெளியீடு காண்பதை எண்ணி பெருமையடைவதுடன் அம்மலருக்கு வாழ்த்துரை வழங்குவதில் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்.

அருணகிரிநாதர் எழுதிய நூல்கள் பல. தேவாரப் பதிகங்களைக் போன்று திருப்புகழ் பாடல்களை பல ஆயிரம் பாடியுள்ளார். அருணகிரிநாதர் தம் திருப்புகழில் பழனிமலையைப் பல்வேறு பெயர்களில் குறிப்பிட்டுள்ளார். இவர் பாடிய தேவாரப் பாடல்கள் காலத்தால் அழியாதவை. நம்மால் இறைவனை காண முடியாது. ஆனால் இவர்கள் பாடிய தேவாரப் பாடல்கள் மூலம் இறைவனை நம் கண்முன்னால் காண முடிகிறது. திருப்புகழ்ப் பாடல்கள் பாடுவோரை மட்டுமன்றி கேட்பவரையும் இறைவன்பால் உள்ள பக்தியை உணர முடியும். சமயத்தின் ஊடே நாம் கல்வி, கலாச்சாரம், பொருளாதாரம் மற்றும் சமுதாயம் சார்ந்த நிகழ்ச்சிகளை தொடர்ந்து நடத்தி வருவோமேயானால் பலனும் சமுதாய வெற்றியும் நம்மை தேடிவரும் என்பது ஆணித்தரமான உண்மை.

அருணகிரிநாதர் மன்ற நிர்வாகத்தினர் மேற்கொண்டுள்ள இந்த முயற்சி நிச்சயம் வெற்றிபெறும். அவர்களின் பணியை மக்கள் வரவேற்று அதன் பயனை கருத்தில் கொண்டு செயல்படுவார்கள் என்று எனது நம்பிக்கையும் இதன்வழி தெரிவித்துக் கொள்கின்றேன்.

அன்புடன்,

(டத்தோ சு.வீரசிங்கம்)
தலைவர், மஇகா பேரா மாநிலம்
பேரா மாநில முதல்வரின் சிறப்பு ஆலோசகர்





### ஈப்போ நாடாளுமன்ற உறுப்பினர்
### மாண்புமிகு மு. குலசேகருடன்
### சில மணித்துளிகள்...

"நெஞ்சக் கனகல்லு(ம்) நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரஆ னைபதம் பணிவோம்" - (க. அநு)

திருக்குறள் நம் வாழ்வை நெறிபடுத்துவதைப்போல் அருணகிரிநாதர் மலைக்கிழவோன் மீது சூட்டிய அருட்பாடல்கள் நம் மனங்களை சீர்செய்ய துணைபுரியும்.

ஈதல் எனும் அறத்தை உண்மையாகச் செய்யுங்கள். அப்பொழுது உண்மைப் பொருள் தானே வெளிப்படும். இவ்வுண்மை பெருகப் பெருக இருவினை, மும்மலம் ஆகியவை ஒடுங்கி, நாம் பிறந்ததிற்கான நாம் அடைய முடியும் என திருப்புகழில் காட்டியுள்ளார் அருணகிரியார்.

இவ்வுண்மையை உணர்ந்து திருப்புகழை பாராயணம் செய்வோர்க்கு, துன்பம்போகும், வறுமை நீங்கும்! பகை நீங்கும்! செல்வம் சிறக்கும்! கேட்ட வரம் தருவார் குறிஞ்சிக் கடவுள்!

காந்தனைக் கந்தக் கடம்பனைச்
 கார்மயில் வாகனனைச்
சார்துணைப் போதும் மறவா
 தவர்க்கொரு தாழ்வில்லையே - (க.அல)

இக்கண்
**மு. குலசேகரன்**





## அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயம் (நகரத்தார் கோவில்) நடப்புக்காரியக்காரர் திரு. கரு. வ. வள்ளியப்பன் அவர்களின் வாழ்த்துச்செய்தி

ஆண்டுதோறும், முதல்நாளில் நமது ஆலய மண்டபத்தில் சிறப்புடன் நடைபெறும் "அருணகிரிநாதர் விழா" சிறப்பு மலருக்கு வாழ்த்துரை வழங்குவதில் பெரு மகிழ்ச்சி.

"செட்டிக் கப்பலுக்கு செந்தூரான் துணை" என்று பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே, கொண்டு விற்க வந்த இடத்திற்கு குமரனையும் கூட்டி வந்தவர்கள் நகரத்தார் பெருமக்கள்.

முருக வழிபாட்டின் தமிழ்மறைகளாம் அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ், கந்தலங்காரம், கந்தரனுபூதி, கந்தரந்தாதி, வேல், மயில், சேவல், சீர்பாத வகுப்பு ஆகியவை. இவற்றை இங்குள்ள மக்களிடையே பரப்பும் சீரிய தொண்டினை அருணகிரிநாதர் மன்றம் மேற்கொண்டு வருகிறது. அவர்களுக்கு நம்முடைய வாழ்த்துகள். மன்றத்தினரின் அரிய சேவை மென்மேலும் சிறக்க எல்லா வல்ல தண்டாயுபாணியைப் பிரார்த்திப்போம்.

அருள்மிகு தண்டாயுதபாணி சரணம்
அருணகிரிநாதர் அடிமலர் சரணம்"

அன்புடன்
**கரு. வ. வள்ளியப்பன்.**





## மலேசிய இந்து சங்கம் பேரா மாநிலப் பேரவைத் தலைவர் சங்கபூஷன் அமுசு. ஏகாம்பரம் PPT அவர்களின் வாழ்த்துச் செய்தி

ஈப்போ அருணகிரிநாதர் மன்றத்தின் ஏற்பாட்டில் நடைபெறும் அருணகிரிநாதர் விழாவிற்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் பெருமகிழ்ச்சியடைகின்றேன்.

நமது இந்து சமயம் மிகப் புராதனமான பழமையும் தொன்மையுமுடைய தெய்வீக சமயம். கடல் கடந்து நல்வாழ்வைத் தேடி இந்த மலேசிய திருநாட்டிற்கு வந்த நமது மூதாதையர்கள் வழி நாம் நமது சமயத்தையும், கலை கலாச்சாரத்தையும் ஆழமான தெய்வ நம்பிக்கையையும் இன்று வரை பேணி பாதுகாத்து வருகின்றோம்.

அருணகிரிநாதர் சுவாமிகளின் அருளிய "திருப்புகழ்" இந்து சமயத்திற்கு கிடைத்த மாபெரும் பொக்கிஷமாகும். இந்து சமயம் உள்ளவரை இது காலத்தால் அழியாது. இந்துப் பெருமக்களும், இளைய தலைமுறையினரும் நமது சமயத்தையும், கலாச்சாரத்தையும், மொழியையும் நன்கு விளங்கிக் கொள்ளவும், சமயம் சார்ந்த வாழ்வியல் முறைகளை உணர்ந்து பின்பற்றவும் இது போன்ற நிகழ்வுக்ள உதவும் என்பதில் ஐயமில்லை.

நடைபெறவிருக்கும் அருணகிரிநாதர் விழா எல்லா வகையிலும் சிறப்புடன் நடக்க எனது மனமார்ந்த வாழ்த்துகளை தெரிவித்துக் கொள்வதுடன் இந்த அரிய பணியை பேற்கொண்டு வரும் ஏற்பாட்டாளர்களுக்கு மலேசிய இந்து சங்கம் பேரா மாநிலப் பேரவை தனது உளமார்ந்த பாரட்டுதல்களை தெரிவித்துக் கொள்கிறது.

நன்றி.

அன்புடன்
**சங்கபூஷன் அமுசு. ஏகாம்பரம் PPT**





## ஈப்போ அருணகிரிநாதர் மன்ற செயலாளர் திரு. இரா. தமிழரசன் அவர்களின் செய்தி

இன்பமே சூழ்க! எல்லோரும் வாழ்க!

தமிழ்க் கடவுளாம் செந்தமிழ் குமரன்மீது பாமாலை என்னும் தேனினும் இனிய திருப்புகழை மணியாரம் சூட்டிய அருணகிரிநாதர் பெயரில் மன்றம் அமைத்து கடந்த இரண்டு ஆண்டுகளாக சனவரி திங்கள் முதலாம் நாள் அன்று விழா எடுத்து வருகின்றோம்.

2010-ஆம் ஆண்டு மலேசிய இந்து சங்க ஈப்போ வட்டாரப் பேரவை ஆதரவோடு தொடங்கப்பட்ட இவ்விழா கடந்தாண்டு முறையாக பதிவுப்பெற்றது.

இவ்வாண்டு விழா மகப்பேறு வள்ளுனர் டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பன் அவர்களின் தலைமையில் இயல், இசை, சமயப் சொற்பொழிவுகள் என முக்கனிகளாக மலர்கின்றன.

தேவாரப் பதிகங்களைப் போன்று திருப்புகழ் பாடல்களையும் தலைமுறையாக வகைப்படுத்தலாம். இவ்வகையில் முருகப் பெருமான் உறையும் திருவாவினன்குடி உள்ளிட்ட அறுபடைதலங்களில் பாடப் பெற்ற திருப்புகழ்ப் பாடல்கள் போன்றவை அடங்கும். குறிப்பாக, பழநித்தல திருப்புகழ்ப் பாடல்கள் அவற்றின் சந்த நயத்திலும், பொருள் நிலையிலும் சிறப்புற்று விளங்குகின்றன.

இவ்விழா சிறக்க அனைத்து நிலைகளிலும் உற்றூழி உதவி வரும் அனைத்து நல்லுள்ளங்களுக்கும் இவ்வேளை எங்களின் நெஞ்சார்ந்த நன்றி.

"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய்; அருள்வாய் குகனே"

அருணகிரிநாதர்

இக்கண்
**இரா. தமிழரசன்**



உ
சிவகுக மயம்





# வாரியார் சுவாமிகளின் சீடன் ஜோதி சுந்தரவேணுகோபால், தமிழகம்

பேரன்பு சார்ந்த ஆன்மீகப் பெருந்தகையீர் அனைவருக்கும் அனந்தவந்தனம்.
நமது மலேசிய நாட்டிலே, ஈப்போ மாநகரில் 1-1-2012 அன்று மாபெரும் அருள் ஞானவள்ளல் முருகனைத் தவிர மற்ற தெய்வங்களைப் பாடாத அநுபூதிச் செல்வர், திருப்புகழ் விழா இனிது நடைபெறவும் இந்த விழாவிற்கு அருந்துணை புரியும் அருளாளர்கள், முருகனின் பரிபூரண அருள்பெற்று, அனைத்து நலன்களும் பெற்று வாழவும் இந்த விழா தொடர்ந்து நடைபெறவும் அனைவரும் கூட்டு முயற்சி செய்து வழிபடவும், உலகமெங்கும் அமைதியும், சாந்தமும் நிலைபெறவும், இயற்கைச் சீற்றங்கள் வாராமலும் முருகப் பெருமான் அனைவருக்கும் நிறை ஆயுளைத் தந்து விவசாயம், வியாபாரம், உத்தியோகம், குழந்தைகள் கல்வி நலம், திருமணத் தடைகள் நீங்கித் திருமணங்கள் நடைபெறவும், சந்தானம் இல்லையென்று கூறும் அன்பர்கள் முருகன் அருளால் குழந்தைப் பாக்கியம் பெறவும்,விழா இனிதே நடபெறவும் இன்பமே பெருக எல்லாம் வல்ல தணிகைவேலனையும் எனது பரமகுருநாதர் கிருபானந்த வாரியார் சுவாமிகளையும் வணங்கி வாழ்த்துகிறேன்.
அனைவருக்கும் நன்றி.





## ஈப்போ ஸ்ரீ தண்டாயுதபாணி ஸ்ரீ அரசமர விநாயகர் துதி

("பொற்கிழிக் கவிஞர், "காசி ஸ்ரீ" அரு. சோமசுந்தரன், ஆறாரைஃகுடி, தமிழ்நாடு)



வெள்ளீயம் விளைகின்ற பேரா பூமி
வெற்றிமிகு மாநிலத்தின் நகராம் ஈப்போ
பள்ளத்தாக் கானபூமி! மூவி னத்துப்
பண்பாட்டு மக்களெல்லாம் வாழும் பூமி!
வெள்ளம்கிண் டாநதியின் நீரி னாலே
விளைகின்ற பூமியிது! நகரின் மையம்
உள்ளமெலாம் ஈர்க்கின்ற தண்ட பாணி
உயரடிகள் பணிகின்றோம் அருளுவாரே



சடையப்ப வள்ளல்போல் ஈப்போ மண்ணின்
சமயத்தை தமிழோடு வளர்க்கும் மக்கள்
தடையில்லா நகரத்தார் பண்டு தொட்டுத்
தணியாத பக்தியினால் வணங்கும் வேலா!
மடைதிறந்த வெள்ளம்போல் செல்வம் ஈந்து
மக்களெல்லாம் காக்கின்ற தண்ட பாணி!
புடைபரந்த ஆலமர அரசின் கீழே
புகழ்மணக்கும் விநாயகரே! காப்பாய் அய்யா!



# ஆறுபடை வீடுகளும் ஆறுமுகனருளும்

(கலைமாமணி முனைவர் திருமதி சாரதா நம்பி ஆரூரன்)



தமிழும் முருகனும்

அழகென்னும் தமிழ்க் கடவுளாக முருகனைத் தமிழர் வழிபட்டனர். தமிழ் வேறு முருகன் வேறல்ல. தமிழே முருகன் எனலாம். தமிழ் என்றும் இளமை மாறாதது. முருகக் கடவுளும் என்றும் மாறா அழகும் இளமையுமுடையவன்.

தமிழில் 12 உயிர் எழுத்துக்கள் உண்டு. முருகனுக்கு 12 தோள்கள் உள்ளன. இது முதல் ஒற்றுமை. அடுத்து, தமிழில் மெய்யெழுத்துக்கள் 18 உண்டு. முருகனுடைய ஒவ்வொரு முகத்திலும் மூன்று கண்களாக ஆறு முகங்களிலும் 18 கண்களை உடையவன். மூன்று கண்களை உடையவர்களாகச் சிவபெருமான், உமையவள், விநாயகர், முருகன் கருதப்படுகின்றனர்.

"உருவமில்லாத அருட்பெருஞ்ஜோதி ஆண்டவன் ஆறுமுகங்கள், பன்னிரண்டு தோள்கள், பதினெட்டுக் கண்கள் கொண்ட இந்த அருளுருவத்தை உலகம் உய்யும் பொருட்டு எடுத்துக் கொண்டான்" என்கிறது வடமொழி ஸ்காந்தம். எனவே முருகவேளுடைய பதினெட்டுக் கண்கள் போல் மெய்யெழுத்துக்கள் பதினெட்டும் அமைந்துள்ளன. முருகனுக்கு முகங்கள் ஆறு. தமிழிலும் வல்லினம் ஆறு; மெல்லினம் ஆறு; இடையினம் ஆறு.

முருகன் கையிலேந்தியுள்ள வேல் ஒப்பற்ற ஆயுதமாக விளங்குவதைப் போல, தமிழிலும் ஆயுத எழுத்துச் சிறப்புடையதாக விளங்குகிறது. இவ் ஒற்றுமைகளால் முருகனுக்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பு புலனாகும். அகத்தியருக்கும் அருணகிரிக்கும் தமிழ் கற்பித்தவன் முருகன்.

"அருணதள பாதபத்மம் அதுநிதமுமே துதிக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா"
"முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்"
என்று அருணகிரியார் தமிழ்க்கடவுளைப் போற்றுகிறார்.

"செந்தில் வாழ் செந்தமிழ்ப் பெருமாள்" என்றும் " செந்தமிழ்ச் சொல் மாலைக்காரன்' என்றும், "தண்டமிழில் மிகுநேய முருகேசன்' என்றும், தமிழ்ப்பாடல் கேட்டருள் பெருமாளே' என்றும் பாடிப் பரவுகின்றார்.

ஒரு நாமம் ஓருருவம் இல்லான்

சூரபன்மனுடைய கொடுமைகளைப் பொறுக்க முடியாத தேவர்கள் முக்கட் கடவுளிடம் சென்று,

"விமல ஓர் குமரன் தன்னை நீ தரல் வேண்டும்" நின்பால் நின்னையே நிகர்க்க" என்று வேண்ட, சிவபெருமானே முருகக் கடவுளாக அவதரித்ததை,



ஈசனே அவனாடலால் மதலையாகினன் காண்
பேசில் ஆங்கவன் பரனோடு பேதகன் அல்லன்"
என்ற கச்சியப்ப சிவாசாரியார் பாடலால் அறியலாம்.
இம்முருகனுக்குப் பற்பல பெயர்கள் உண்டு.

கங்கைக்கு மைந்தனாக வந்ததால் காங்கேயன்; கார்த்திகைப் பெண்கள் வளர்த்ததால் கார்த்திகேயன்; பகைவருடைய வலிமையை வற்றச் செய்பவன்; பற்றுக் கோடாக விளங்குபவன் கந்தன்; கடப்ப மலர்மாலையை அணிந்தவனாதலால் கடம்பன; சரவணப் பொய்கையில் தோன்றியவன் என்பதால் சரவணன்; செந்நிறம் படைத்தவனாதலால் செவ்வேள்; தேவர்களின் சேனைத் தலைவனாக இருந்து சூரனை வென்றதால் தேவ சேனாதிபதி; அறிவுச் சுடராகிய வேலை ஏந்தியதால் வேலன்; ஆறுமுகங்களை உடையவனாதலால் ஆறுமுகம்; முதற் பொருளாக விளங்குபவனாதலால் சுப்ரமணியம்; அழகும் இளமையும் உடையவனாதலால் குமரன்; அடியவர்களின் உள்ளமெனும் குகையில் வசிப்பதால் குகன்; விசாக நாளில் அவதரித்ததால் விசாகன்; தந்தைக்கு உபதேசம் செய்ததால் தகப்பன்சாமி, குருமூர்த்தி, சாமிநாதன் என்றெல்லாம் அழைக்கப்படுகின்றான்.

## படைவீடும் பரம்பொருளும்

முருகன் உறையுமிடங்களில் ஆறுபடை வீடுகள் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன. சேனைகளும் சேனாதிபதியும் தங்கியிருக்கின்ற இடத்திற்குப் படை வீடு, என்று பெயர் விடுபடுவது வீடு. இவ்வீடு பேற்றைத் தருபவன் முருகன். வீடு பேற்றுக்குத் தடையாக இருப்பவைக் காம, க்ரோத, லோப, மோக, மத மாற்சரியங்கள் அகப்பகை, புறப்பகை இரண்டையும் அழிக்கின்ற வெற்றிவேல் வீரன் தங்கியுள்ள வீடு படைவீடு எனப்பட்டது.

முருகப் பெருமான் தங்கியுள்ள தலங்களுள் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்று தோறாடல், பழமுதிர்ச்சோலை என்பவைகளை ஆறுபடை வீடுகளாகக் குறிக்கின்றோம், இப்படை வீடுகளுக்குச் சென்று, முருகனின் ஆறெழுத்து மந்திரத்தை ஓதும் அடியார்கள் உள்ளத்தில் அழகன் வீற்றிருப்பான் என்பதை,

ஆறு திருப்பதிகண் டாறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே"
என்கிறது கந்தர் கலி வெண்பா.

ஆறுபடைவீடுகளைப் பற்றி அருணகிரி கந்தர் அந்தாதியில் கூறும் போது,

"திருவாவி னன்குடி பங்காள ரெண்மமுது சீருரை சதிர்
திருவாவி னன்குடி வானார் பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி யேரசும் குன்று தொறாடல் சென்ற
திருவாவி னன்குடி கொண்டதன் கார்வரை செப்புமினே"

என்கிறார்.



இப்பாடலில் 'திருவாவினன்குடி' என்பது பிரிமொழிச்சிலேடையாகப் பல பொருள் தருவது நயமுடைத்து.

நான்குமுறை இடம் பெறும் 'திருவாவினன்குடி எனும் சொல் முதலில் திருமகளை மார்பிலேந்திய திருமாலையும், அடுத்து முருகனையும், மூன்றாவதாகப் பழனியையு, இறுதியாக யானைக் கூட்டங்களையும் உணர்த்துகிறது.

நம் உடம்பில் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம் அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்கள் உள்ளன. இந்த ஆறு ஆதாரங்களிலும் ஆறுமுகன் வீற்றிருக்கிறான் என்பதைக் குறிப்பனவே ஆறுபடை வீடுகள்.

மூலாதாரம் - திருப்பரங்குன்றம்
சுவாதிஷ்டானம் - திருச்சீரலைவாய்
மணிபூரகம் - திருவாவினன்குடி
அநாகதம் - திருவேரகம்
விசுத்தி - குன்று தோறாடல்
ஆக்ஞை - பழமுதிர் சோலை

இவ்வாறுபடை வீடுகளையும் வழிபடுபவர்க்கு ஆறுமுகன் ஆறுதலைத் தறுவான் என்பதுறுதி!

ஆற்றுப்படை கூறும் அடிகள்

முருகன் புகழ்படும் நூல்கள் பலவற்றுள் பத்துப் பாட்டு நூல்களுள் ஒன்றான திருமுருகாற்றுப்படை தலையானதெனலாம். முருகன் மிது நக்கீரரால் எழுதப்பட்ட இந்நூலே முழு முதல் சமய நூலாகும். பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்ட பெருமை உடையது. இந்நூல் குறிஞ்சிக் குமரன் ஆறுபடை வீடுகளில் அமர்ந்தருளும் பான்மையினை அழகுற எடுத்தியம்புகிறது. நக்கீரரால் எழுதப்பட்ட இந்நூல் வழிநின்று ஆறுபடை வீடுகளில் அமைப்பையும், அழகையும், அழகன் அருளும் திறத்தையும் இனிக் காண்போம்.

பரங்குன்றிற் பன்னிருகை கோமான்

திருப்பரங்குன்றத்தில் தொடங்குகிறார் நக்கீரர்.

"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு"

என்ற நூல் தொடங்குகிறது.

முருகனின் அழகு உதிக்கின்ற கதிரவனின் அழகுக்கு ஒப்பாகக் கூறப்படுகிறது. ஞாயிற்றின் ஒளியையும், முருகப்பெருமானின் அருள் ஒளியையும் ஒப்பிட்டுப் பார்க்கிறார் நக்கீரர். முருகப் பெருமானின் அருள் ஒளியே சிறப்படைகிறது. ஏனெனில் ஞாயிற்றின் ஒளி புற இருளைத்தான் போக்கும். முருகனின் திருமேனியின் ஒளி



வெள்ளமும், அருள் ஒளியும் காண்பவர் அறியாமைகளை யெல்லாம் சிதைக்கும் அடியவர் உள்ளத்தில் பெருமானின் ஒளி சென்று, நிறைந்து அவர்களை உயர்த்தவும் செய்யும். அதுமட்டுமல்ல கதிரவன் ஒளி புகமுடியாத

இம்முருகப்பெருமாளை வழிப்படத் தேவமகளிர் வருகின்றனர். "கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி வாழிய பெரிது" என்று போற்றிப் பரவுகின்றனர். செங்காந்தன் பூச்சூடிய செவ்வேளைப் பேய்மகள் துணங்கைக் கூத்தாடி வணங்குகின்றான். இங்ஙனம் வழிபடுபவர்க்கு அருள்வதற்காகத் திருப்பரங்குன்றத்தில் வீற்றிருக்கின்றான் முருகன். இத் திருப்பரங்குன்றம் நீர் வளமும், நில வளமும் நிறைந்தது. இங்குள்ள வண்டுகள் இரவில் தாமரைப் பூவில் துயின்று, வைகறையில் நெய்தற் பூவிலுள்ள தேனையருந்தி, ஞாயிறு தோன்றிய பின்னர் சுனைமலரின் கண் சென்று ஆரவாரிக்கும் என்கிறார் நக்கீரர்.

அடுத்து நாம் செல்லுமிடம் திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)

**சீரலைவாய் உறை செந்தில் நாதன்**

ஓங்கி உயர்ந்த வேழத்தின் மேல் ஆறுமுகங்களோடும், பன்னிரு கரங்களோடும் இங்கு முருகப்பெருமான் காட்சியளிக்கிறான். ஆறுமுகங்களின் தோற்றத்தைத் திருமுருகாற்றுப்படையில் அழகுபட விளக்குகிறார் நக்கீரர். இவ்வுலகம் அறியாமை என்னும் இருளில் மூழ்கிக் கிடக்கிறது. அதனை ஒளியுடையதாக ஆக்க வேண்டும் என்ற கருணையால் செந்தில்குமரனது ஒரு முகம் அறிவாகிய ஞான ஒளிக் கதிர்களை பரப்பும். அந்த ஒளியின் எல்லைக்குள் வந்தவர் அறியாமைப் பேரிருளிலிருந்து விடுபட்டு ஞான ஒளியை அடைவர் என்பதை,

"மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒரு முகம்" என்கிறார்.

ஒருமுகம் அன்பர்கள் தன்னை வாழ்த்தும் போது மகிழ்ந்து வரம் கொடுக்கிறது.

"ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக்
காதலின் உவந்து வரம்கொடுத்தன்று ஒரு முகம்"

ஒரு முகம் 'சரவணபவ' என்றும், 'நமக்குமாராய' என்றும் மந்திரங்களை ஓதுவதுடன், வேள்வி செய்யும் சான்றோர்களைப் பாதுகாக்கும்.

"மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க்கும்மே ஒருமுகம்".

ஒருமுகம் நூல்களால் காட்ட முடியாத வீட்டின்பத்தை அன்பர்களுக்கு உணர்த்துகின்றது.

"எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித் திங்கள் போலத்திசை விளக்கும்மே



ஒரு முகம்"

எஞ்சிய பொருள்கள் எவை என்பதை.

"தென்னன் பெருந்துறையான்,
காட்டாதன வெல்லாம் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டாமரைக் காட்டித் தன் கருணைத் தேன் காட்டி"
என்ற திருவம்மானை வரிகளுணர்த்தும்.
ஒரு முகம் அரக்கரை அழித்து, சினம் பொருந்தியதாகக் காணப்பட்டது.
"செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவுகொள் செஞ்சமொடு களம் வேட்டன்றே ஒருமுகம்"
ஆறாவது முகம் குறவர் குலக்கொடியாம் வள்ளியை மணந்து மகிழ்வோடுள்ளது.

"குறவர் மடமகன் கொடிபோல் நுசுப்பின்
மடவரல்வள்ளியொடுநகையமர்ந்தன்றே ஒருமுகம்"

இங்ஙனம் விளங்கும் முகங்கள் ஆறுக்கும் ஏற்ப, அவனுடைய கைகள் பன்னிரண்டும் முறையே பணி புரிகின்றன. வானத்தே துந்துபி முழங்க, கொம்பு இசைக்க, சங்கு ஒலிக்க அடியவர்க்குஅருளுவதற்காக யானை மீதமர்ந்து வருகிறான்செந்தில்நாதன்.

## திருவாவிநன் குடியும் தேவர் குறை தீர்த்தலும்

ஆவிநன்குடி என்பது இப்போது பழனியென வழங்கப்படுகிறது. திருவாவிநன்குடி என்பது திரு.ஆ. இனன், கு.டி. என்று பிரிக்கப்பட்டுத் திருமகளும் காமதேனுவும், ஞாயிறும், நிலமகளும், தீக் கடவுளும் வழிபட்ட இடம் என்று புராண வரலாறு பெற்றது.

ஆவிநன்குடியில் ஆறுமுகனைக்காண அடியவர்கள் மட்டும் வரவில்லை. முனிவர்களும் கந்தர்வரும், கருடக் கொடியோனாகிய திருமாலும், ஆனேற்றை வெற்றிக் கொடியாசு உடையவனும், உமையொரு பாகனுமாகிய சிவ பெருமானும்,, தேவர் கோனாம் இந்திரனும், முருகனைக்காண வருகின்றனர். பிரணவ மந்திரத்தின் பொருள் தெரியாததால் பிரமனைத் தலையில் குட்டிச் சிறையில் இட்டான் குமரன். எனவே படைப்புத் தொழில் தடைப்பட்டதால் பிரமனைச் சிறையிலிருந்து விடுவிக்க வேண்டும் என்று இவர்களனைவரும் வேண்டுவதற்காக வருகின்றனர்.

குறையிரந்தவரகளுக்கு அருளுவதற்காக தெய்வயானையுடன் திருவாவினன் குடியில் முருகப் பெருமான் குடி கொண்டுள்ளான் என்பர் நக்கீரர்.

## இரு பிறப்பாளர் வழிபடும் திருவேரகம்

ஏரகம் என்பது தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த சுவாமி மலையாகும். அருணகிரி இத்தலம் பற்றிப் பல பாடல்களைப் பாடியுள்ளார். சிவன் பிரணவ மந்திரப் பொருளைக் கேட்க, முருகன் தந்தைக்கு உபதேசம் செய்த குருவாக, தகப்பன்சாமியாக,



சுவாமிநாதனாகக் காட்சியளிப்பது சுவாமிலை யெனும் திருவேரகமாகும். இதனை அருணகிரி நாதர்.

"அருணதள பாத பத்மம் அதுநிதமுமே துதிக்க
அரிய தமிழ் தானளித்த மயில்வீரா!
அதிசயம் அநேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழகு திருவேரகத்தின் முருகோனே"

என்று பாடுகின்றார்.

ஏரகத்தில் நாற்பத்தெட்டாண்டுகள் பிரமசரிய ஒழுக்கம் காத்து, முத்தீ வளர்த்து, நீரில் மூழ்கி, புலராத ஆடையோடு உச்சிக் கூப்பிய கையினராய் முருகனைப் புகழ்ந்து, ஆறெழுத்து மந்திரத்தை இடைவிடாது ஓதி, மமணமிக்க மலர்களால் செவ்வேளைப் பூசிக்க அவ்வன்பர்களுக்கு அவன் அருள்கிறான்.

இறைவழிப்பாட்டு முறைகளில் சில குறிப்புகளை நக்கீரர் இபபகுதியில் தருகிறார்.

"ஆறெழுத்தடக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கில் நவிலப் பாடி"

எனும் பகுதி நயம் வாய்ந்தது. சரவணபவ, நம: குமாராய போன்ற ஆறெழுத்து மந்திரங்களை அந்தணர்கள் ஓதுகின்றனர். 'நாஇயல் மருங்கில் நவிலப் பாடு' கின்றனர். மந்திரங்களை ஓதும்போது பிறர் காதில் விழாதபடி நாவால் மெதுவாக உச்சரித்தல் வேண்டுமென்பது பெறப்படும். பூவால் அருச்சிப்பதே பூசை எனப்படும். இதனையே 'விரையுறு நறுமலர் ஏத்தி' என்று குறிப்பிடுகிறார் நக்கீரர்.

குன்று தோறாடும் குமரன்

முருகன் குறிஞ்சி நிலக் கடவுள். எனவே குன்றுகள் எல்லாம் அவனுறையுமிடங்களாகும். இக்குன்றுகளில் வாழும் குறவர்கள் எப்படி முருகனை வழிபடுகின்றனர் என்பதைத் திருமுருகாற்றுப்படை விளக்கமாக கூறுகின்றது.

குறவர்கள் முருகனை வழிபடுங்கால், இவர்களுள் வழிபாட்டுக்கென ஒருவன் இருப்பான். அவன் வேலன் எனப்படுவான். இவன் மாலையணிந்து, சந்தனம் பூசி இருப்பான். இவ்வேலன் முருகனை வழிபடுதற்குரிய இடத்தை தேர்ந்தெடுத்துத் தூய்மை செய்து பச்சிலைகளால் பந்தலமைத்து, கோழிக்கொடி நட்டுக் கோயிலமைப்பான். அங்கு குறவர்கள் அனைவரும் வந்து கூடி, கள்ளுண்டு, குரவைக் கூத்தாடுவர்; தொண்டகம் எனும் பறையை முழக்குவர். மலைநிலத்து மகளிரும் இவ்வழிபாட்டில் கலந்து கொள்வர். இம்மகளிரிடையே முருகன் தோன்றிக் குரவையாடும் மகளிர்க்கு தலைக்கை தந்து குன்று தோறும் விளையாடுவான் என்கிறார் நக்கீரர்.

## பழமுதிர்ச்சோலை மலைக் கிழவோன்



முருகனை வழிபடுவதற்குரிய இடங்கள் எவை என்பதை நக்கீரர் திருமுருகாற்றுப்படையின் இறுதிப்பகுதியில் விளக்கமாகச் சொல்கிறார். வழிப்பாட்டுக்குத் தகுதியற்றது என்று குறிக்கத்தக்க இடம் ஒன்றுமேயில்லை என்றறிகிறோம்.

இதற்குமுன் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேகரம் ஆகிய இடங்கள் சாத்திரமும், சடங்கும் தளராத முயற்சியும் கொண்டு வழிபடுவதற்குரிய இடங்காகக் குறிக்கப்பட்டன. அவை உயர்ந்தோருக்கும், அந்தணர்க்கும், முனிவர்க்கும் உரியன. இப்பகுதியில் குறிப்பிடப்படும் எல்லோருக்கும் உரியன.

"வழிபாட்டிடங்களால் ஏற்றத்தாழ்வு ஒன்றுமில்லை. அன்பொன்றே வேண்டப்படுவது அன்புடையோர் இருக்கும் இடம் தேடி வந்து, முன்னின்று முருகன் அருள் புரிவான்" என்று அவனுடைய எளிமையை விளக்கும் பகுதி இது என்பார் துரை அரங்கசாமி.

## அன்பு நெறியே தமிழர் நெறி

தினையரிசியைப் பூக்களோடு கலந்து வைத்து, மறியறுத்துக், கோழிக்கொடி உயர்த்தி விழா எடுக்கும் இடங்களில் முருகன் இருப்பான். தன்னை அன்புடையார் நினைக்கும் இடங்களில் முருகன் காட்சியளிப்பான்."நெஞ்சில், ஒரு கால் நினைக்கின இருகாலும் தோன்றும், முருகா என்றோதுவார் முன்" (திருமுருகுவெண்டா) என்றபடி நினைப்பவர் நெஞ்சமே கோயிலாகக் கொள்பவன் அவன்.

வேலன் வெறியாடுமிடங்களிலும், காட்டிலும், சோலையிலும், ஆற்றிடைக் குறையினும் ஆற்றிலும், குளத்திலும், பற்பல ஊர்களிலும், நாற்சந்தியிலும் முச்சந்தியிலும், ஐஞ்சந்தியிலும், கடப்ப மரங்களிலும் மக்கள் குழுமியுள்ள மன்றங்களிலும் ஊரம்பலங்களிலும் அவன் காட்சியளிப்பான். அவன் இல்லாத இடங்களே இல்லையாதலால் யாண்டும் அவனைக் காணலாம். இருந்த இடத்தில்இருந்தப்படியே அவனைக் காணலாம். அவனருளைப் பெற அன்பொன்றே வேண்டப்படுவது.

உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றி அனைவரும் அவனருளைப் பெறுவதற்குரியோரே என்பதை ஒரு குறப் பெண் தன் வழிப்பாட்டால் முருகனருள் பெறுவதன் மூலம் காட்டுகிறார் நக்கீரர்.

குறப்பெண் கோழிக்கொடி ஒன்றை நட்டு அதையே முருகனிருப்பிடமாக நினைத்து, அலங்கரித்தாள்; மலர் தூவினாள்; வெண் பொரி சிதறினாள்; ஆட்டக் கிடாயை அறுத்து, அதன் குறுதியோடு பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறுபலியாக இட்டாள்; அலரி மாலையால் கோயிலை அலங்கரித்தாள், தூபம் இட்டாள், குறிஞ்சிப் பண் பாடினாள். குறுதி கலந்த தினையரிசியைப் பரப்பினாள், முருகன் உவக்கும்படியான



கருவிகளை இசைத்து முருகனை வரும்படி செய்தாள் என்கிறார்.
குருதி கலந்த அரிசி, ஆட்டுகிடாய்ப்பலி, அச்சமூட்டும் வெறியாட்டு இவை தூய்மையற்றனவாக நமக்குத் தோன்றலாம். ஆனால் குறவர் மரபுக்கு இவை தூய்மையற்றன அல்ல.

ஒவ்வொருவரும் வாழும் சூழ்நிலைக்கேற்ப அவர் தம் உணவு, உறையுள், உடை, பழக்க வழக்கங்கள், பண்பாடு, ஆசாரம் முதலியன மாறலாம். அது பற்றிக் கவலையில்லை 'உள்ளக்கமலமடி உத்தமனார் வேண்டுவது' என்றபடி அன்பிருந்தால் அருளைப் பெறலாமென்றுணர வைக்கின்றார் நக்கீரர். எனவே நூலறிவு, நுண்ணறிவு, முயற்சி, சடங்கு இவற்றின் துணையின்றியே, எளிமையான அன்பால் இறையருளைப் பெறலாமென்றறிகிறோம்.

'பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்' என்பர் மாணிக்கவாசகர், தன்னிடத்தில் அன்பு வைத்துள்ள அன்பர்களின் பாதங்களையே தனக்கு உணவாகப் பெற்றுக் கொள்வதற்காக, தன் கையில் ஊன் கழிந்த தலையோடு ஏந்தி அடியார் இருக்குமிடந்ததேடி சிவபெருமான் வருவது ஆண்டவனுடைய எளியார்க்கு எளியனாந் தன்மையை விளக்கும்.

எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்துள்ள முருகனை நம்முன் நிற்பதாக நினைத்து அவன் புகழ் மொழிகளைக் கூற வேண்டும், கைகளைத் தலைமேலே கூப்பி வைத்துப் பரவ வேண்டும். கீழே விழுந்து வணங்க வேண்டும்.

"அறுவர் பயந்த ஆறமர் செல்வ, கடவுட்புதல்வ, மலைமகள் மகனே, மாற்றோர் கூற்றே, கொற்றவை சிறுவ, வானோர் தானைத் தலைவ, மாலை மார்ப, நூலறிபுலவ, செருவில் ஒருவ, பொருவிறல் மள்ள, அந்தணர் வெறுக்கை, அறிந்தோர், சொல்மலை, மங்கைர் கணவ, மைந்தர் ஏறே, உன் புகழை எடுத்தியம்பபுதல் என்னால் இயலாது" என்றலெல்லாம் நாம் போற்றினால் முருகன் தோன்றுவான், நம் அச்சத்தை ஒழிப்பான். நமக்கருளுவான். அவன் பழமுதிர்சோலைக்கதுத் தலைவனாவான் என்று திருமுருகாற்றுப்படையை முடிக்கின்றார் நக்கீரர்.

வழிபாட்டிடம் வழிபாட்டுமுறை முக்கியமல்ல. அவனை வழிபடும் மனம் அவன்பாற்பட்டதாக, அன்பு நெறியுடையதாக இருக்க வேண்டும் என்பதே திருமுருகாற்றுப்படை மூலம் நக்கீரர் நமக்குக் காட்டும் வழியாகும்.







## "அருணகிரிநாதர் வாழ்வும் வாக்கும்"

**இளைய வாரியார் சுவாமிகள்**
**ஜோதி சுந்தரவேணுகோபால், தமிழகம்**

அன்புச்சார்ந்த ஆன்மநேயச் சான்றோர்களே! வந்தனம். 1-1-2012 ஆகிய இன்று அநுபூதி அண்ணல் விழா. ஞானிகளிலேயே தனித்தன்மை வாய்ந்த பெரியவர். அருண முனிவர் 15-ம் நூற்றாண்டிலே தமிழ் நாட்டிலுள்ள பஞ்சபூதத் திருத்தலங்களிலே ஒன்றான, வெப்பு (நெருப்பு) தலம், திருவண்ணாமலையிலே, திருஅவதாரம் செய்தார். நம்பனார் அருள் கிட்டாமையால், பல தீயவழிகளில் சென்று உடல் நலம் குன்றி, மனம் வெதும்பி பிரபுட தேவராயனால் கட்டப்பெற்ற பெரியகோபுரமும் வல்லாளராயனால் கட்டப்பட்ட பின்கோபுரமும் அமைந்த அக்கோபுரத்தில் ஏறித் தன்இன்னுயிரை நீக்க எண்ணிக் கீழே குதிக்கும் போது, அவரை, சுவாமிகளை குருகப்பெருமான் தடுத்தாட்கொண்டார். அந்த இடம் தான் இன்று கம்பத்து இளையனார்கோவில் என்று அமைந்துள்ளது.

அங்கு முருகவேள் அருணகிரிநாதர் என்று கூப்பிட, அவர்தேகம் வைரநிலை பெற்றது. அருணகிரி திருப்புகழ் பாடு! என்று முருகன் கூற ஏடறியாச் சிறுவன் எதைப்பாடுவான் என்று அருணகிரியார் கூற அப்போது முருகப்பெருமான் அருணகிரியார் நாவில் 'ஓம்' என்று எழுதி முத்ததைத் தரு என்று அடியெடுத்துத் தந்தார். அது தொடக்கம் மடை திறந்த வெள்ளமென கவிதை பிரவாகமெடுக்க, இமயம் வரை சென்றும் கதிர்காமம், திரிகோணமலையென பல ஆலயங்களுக்கும் சென்று 16,000 திருப்புகழ்ப் பாடல்களைப் பாடினார்கள்.

இவரது பாடல்கள் இனிய சந்தக் கவிதைகளாகும். அந்தக் காலத்தில் சைவ, வைணவப் பூசல்கள் அதிகம். அதை மாற்றவே முருகவேள் இவரைக் கொண்டு திருப்புகழ் பாடப்பணித்தார்.

இவரது திருப்புகழ் அனைத்திலும் வைணவம் கலந்து வரும் திருப்புகழ் அமிர்தம் போல் உள்ள பாடல்கள் திருமணத் தடை நீங்கப்பாட வேண்டிய பாடல்கள். விறல்மாறன் ஐந்து திருமணத் தடை நீங்கும். நோய் தீர பாட வேண்டிய பாடல், தலைவலி மருந்தீடு, இருமலு நேராக வாதமொடு, சூலைகண்ட இப்படி அநேகம் பாடல். அறிவான குழந்தை வேண்டி திமிர உததியனைய. இதைப்பாட ஞானக்குழந்தை பிறக்கும். செல்வம் வளம்பெறச் சரண கமலாலயத்தைப் பாடலாம். எமபயம் நீங்க, அந்தகன் வருந்தினம் பாட ஆயுள் கூடும்.

மருத்துவம், மாந்திரீகம் பொன்ற ஞானப் பெட்டகமே திருப்புகழ். இதனை முன்பு செய்த தவத்தாலேயே பாட முடியும். இன்று நமக்குள் கிடைத்த பாடல்கள் 1311 மட்டுமை. இவையும் வடக்குப்பட்டு சுப்ரமண்ய பிள்ளையால்தான் கிடைத்தது. அவருக்கு நமது கைக்கூப்பு. இந்த 1311 பாடல்களுக்கும் அடியேனின் பரமகுரு கிருபானந்த வாரியார் சுவாமிகள் 37 ஆண்டுகள் திருப்புகழ் அமிர்தம் என்ற வாயிலாக அனைத்து நாடுகளுக்கும் அனுப்பித் திருப்புகழ் தொண்டு செய்தார்கள்.



அக்காலத்தில் சம்பந்தாண்டான் என்ற தீயவன் பிரபுட தேவராயனிடம், அருணகிரிநாதர் உண்மையிலே முருகன் அருள் பெற்றிருந்தால், முருகனை வரவழைத்துக் காட்டச் சொல்லுங்கள் என்று கூறினான். மன்னனும் அப்படியே சுவாமிகளிடம் வேண்ட அருணகிரிநாதரோ முருகன் அருளால் அஷ்ட சித்திகள் பெற்றவர், சம்பந்தாண்டான் காளி தேவி உபாசகன் காளி தேவி அருள் பெற்றவன்.

எனவே, கயிலைலேயே முருகனை அம்பாள் தூக்கி மடியில் வைத்துள்ளதை சுவாமி ஞானக் கண்ணால் அறிந்து, மயில் விருத்தம் பாட, மயில் ‘கயிலை’ சென்று தோகை விரித்து நடனம் ஆடியது. அம்பாள் தன்னை மறந்த நிலையிலையே மயில் நடனத்தைக் கண்டார்.

முருகன் அம்பாள் மடியிலிருந்து இறங்கி, மயில் மீதேறித் திருவண்ணாமலை வர அப்போதுதான் அதலசேடனாருட என்று பாடுகின்றார் அருணகிரிநாதர்; ஞானக்கண் பெற்றர். கண்குளிர முருகனைக் கண்டார்.

சம்பந்தாண்டான் கண்களை மூடிக் கொண்டான். பிரபுடதேவன் முருகனைக் கண்டான். கண்பார்வை போனது. அருணகிரிநாதர் கந்தர்வலோகம் சென்று பாரிஜாதமலரைக் கொண்டு வந்தால் கண் பார்வை வருமென்று சம்பந்தாண்டான் கூற அவ்வாறே அருணகிரியார் கிளி உருவமாய் மேல் உலகம் சென்று பாரிஜாத மலர் கொண்டுவருமுன் அவர் தேகத்தை, ஆலயத்தின் மேற்புறம் ஸ்தாபிதம் செய்தனர். சுவாமி கிளியாகவே இருந்து உலகம் உய்ய கந்தர் அநுபூதியாய் இன்றும் நம்முடன் வாழ்கிறார்.

**“வேதம் வேண்டாம் சகல வித்தை வேண்டாம்**
**வேத கீதம் வேண்டாம் ஞான நூல் வேண்டாம்**
**ஆதி குருப் புகழை ஓதுகின்ற கொற்றவன்**
**தாள் போற்றும் திருப்புகழைக் கேளீர் தினம்”**





# மெய்ஞானத் திருப்புகழில் விஞ்ஞானக் கூற்றுகள்



டாக்டர். வ. ஜெயபாலன்

முன்னுரை
உள்ளம் உணர்ந்து அனுபவித்தவற்றை, அறிவு ஆராய்ந்து உறுதிப்படுத்துகிறது.

மெய்ஞானத்தால் நமது ஞானிகளும், யோகிகளும் கண்ட பேருண்மைகளை, இன்றைய விஞ்ஞானம் மறு உறுதிப்படுத்துகிறது. நம்முடைய சமயக் கோட்பாடுகள், விஞ்ஞானத்தை அடித்தளமாகக் கொண்ட மெய்ஞானக் கட்டிடங்கள்.

சித்தர் இலக்கியங்கள், திருமந்திரம், தேவாரம், திருவாசகம் என்று இறைவனைப் போற்றும் நமது சமய நூற்களில், அறிவியல் சார்ந்த கூற்றுக்கள் ஏராளம் , தாராளம். அந்த வரிசையில் அருணகிரி நாதர் எழுதிய திருப்புகழும் விதிவிலக்கல்ல.

மெய்ஞானச் சுடராகிய அருணகிரியார், மனித உயிரின் தோற்றம், வளர்ச்சி, மனிதனைத் தாக்கும் நோய் வகைகள், மூப்பு, இறப்பு என்று மனித வாழ்க்கை கூறுகளை விஞ்ஞானப் பூர்வமாக தம்முடைய திருப்புகழ் பாக்களில் எடுத்துரைக்கின்றார்.

மனித உடலால் வரக்கூடிய இன்பத்தை அணுஅணுவாய் அனுபவித்து, பின்னர் அல்லலுற்று, நோய்களால் வருந்தி தன்னுடைய இள வயது வாழ்க்கையை வெறுத்தவர் அருணகிரியார். இதன் காரணத்தால், மனித உடலின் தோற்றத்தையும் , வளர்ச்சியையும், நோய் வகைகளையும், முதுமையையும், இறப்பையும், இறப்புக்குப்பின் உடலுக்கு நேரும் கதியையும் கூறி, மனித வாழ்வு என்பது இவ்வளவுதான், இதில் முருகனின் அருள் ஒன்றே நிலையானது, நீடித்திருப்பது என்று தான் கண்ட சுகானுபவத்தைப் பாடல்களில் விவரிக்கிறார்.

## திருப்புகழில் கருவியல் (Embryology)

மனித உயிரின் தோற்றத்தைப் பற்றிய நுணுக்கங்களை இன்றைய விஞ்ஞானம், " கருவியல் "(Embryology) என்று வகைப்படுத்தியுள்ளது. இன்றைய சோதனைக் குழாய் குழந்தைகளுக்கும், மற்றைய மகப்பேறு இன்மைக்கான மருத்துவ முறைகளுக்கும் இந்த கருவியல் துறையே அடிப்படை.

ஆண், பெண் உயிரணுக்களை அருணகிரியார் விந்து அல்லது சுக்கிலம் என்றும், சுரோணிதம் என்றும் பதினைந்தாம் நூற்றாண்டிலேயே வகைப்படுத்தியுள்ளார். மனித உயிர், வானத்திலிருந்தோ, வேறு கிரகங்களிருந்தோ குதித்து வரவில்லை. மாய வித்தைகளால் உருவாக்கப் பட்டதுமில்லை. ஆணினுடைய விந்து, பெண்ணின் உயிரணுவாகிய சுரோணிதத்துடன் இணைவதால், " கரு " என்ற ஒன்று தோன்றுகிறது, இதுவே உயிரின் தோற்றம் என்று பகுத்தறிவோடு கூறுகிறார் அருணகிரியார். இதைத்தான், இன்றைய மருத்துவ விஞ்ஞானம், நுண்ணுயிர்நோக்கிகளின் (Microscope) துணையோடு உறுதிப்படுத்துகிறது. இதைக் கருவியலில் "

" உயிரணுக்களின் சேர்க்கை' '(Fertilization)என்று கூறுகிறார்கள்.



இதையே அருணகரயார்,

"விந்துப் புளகித இன்புற் றுருகிட
சிந்திக் கருவினி லுண்பச் சிறுதுளி
விரித்த கமலமெல் தரித்து ளெருசுழி
யிரத்த குளிகையொ டுதித்து வளர்மதி .........."

(திருப்புகழ்- பொது)

என்றும்,

" சுக்கி லச்சுரொணி தத்தி லுற்றுநளி
னத்தி லப்புவென ரத்த முற்றிசுக
சுக்கி லக்குளிகை யொத்து கெர்ப்பகுகை
.............................................. வந்துகோலத்

(திருப்புகழ்- திருவருணை)

என்றும்,

" விந்ததி னூறி வந்தது காயம் "

(திருப்புகழ்- திருச்செந்தூர்)

என்றும் கூறுகிறார்.

ஆணின் உயிரணுவாகிய சுக்கிலமும், பெண்ணின் சுரோணிதமும் ஒன்றுபட்டு, ரத்த நாளங்கள் ஊறி, ஒரு குளிகை(மாத்திரை) அளவு ,தாமரை இலைமேல் தண்ணிர் துளியென, குகை போன்ற கருப்பத்தில் தோன்றுகின்றது.இதுவே அருணகிரிநாதர் சொல்லும் உயிரணுக்களின் சேர்க்கை. அடுத்து, கருப்பையில் உருவாகிய கரு, குழந்தையாக உருவாவதையும் அருணகிரியார் விவரிக்கிறார்.

" பனியின் விந்துளி போலவே கருவினூ
மளவி லங்கொரு சூசமாய் மிளகுதுவர்
பனைதெ னங்கனி போலவே பலகனியின் வயிறாகிப்

பருவ முந்தலை கீழதாய் நழுவி நில
மருவி ஒன்பது வாசல்சேர் உருவமுள
பதுமை யின்செயல் போலவே வளிகயிறி னுடனாடி

(குன்றுதோறாடல்- கயிலைமலை)

பனித்துளி போன்ற விந்து, கருவில் சேர்ந்தவுடன், அங்கு ஒரு சூசமாய் (அறிகுறியாய்) தோன்றுகிறது. அதன்பின், சில நாட்களில் மிளகின் அளவாகவும், பின்னர் பாக்கின் (துவர்) அளவாகவும், அதன் பிறகு பனம் பழம் அளவாகவும்,

அதற்கடுத்து தேங்காய் (தெனங்கனி) அளவாகவும், முதிர்ச்சியான கருப்பை, பலாப்பழத்தின் அளவாகவும் வளர்ச்சி காண்கிறது என்று, கருவுற்ற தாயின் வயிற்றிலிருக்கும் கருவின் வளர்ச்சியை விவரிக்கிறார்.

குழந்தை பிறப்பதற்கு சில வாரங்களுக்கு முன்பு, கருவிலிருக்கும் சிசுவின் தலைப்பகுதி கீழ் நோக்கி திரும்ப வேண்டும். குழந்தை கருப்பையிலிருந்து வெளியாகும் பொழுது தலைப்பகுதி முதலில் வெளிவர வேண்டும். இதைத்தான் " பருவமுந் தலை கீழதாய் நழுவி, நில மருவி " என்று சொல்கிறார்.



இன்னொரு பாடலில், (விந்துப் புளகித இன்புற்றுருகிட ...), ஏழாம் மாதம் தாயின் வயிறின் அளவு குடம் போலவும், மெழுகில் படிந்த வடிவம் போல குழந்தை வடிவம் பெறுவதையும் கூறி, பத்தாவது மாதம், தாமரை வடிவுள்ள பெண் உறுப்பு வழியாக, குழந்தை அசுத்தமான கழிவு நீருடன் வெளி உலகிற்கு தள்ளப் படுவதை விவரிக்கிறார். இதுதான் இன்றைய மருத்துவ விஞ்ஞானம் சொல்லும் இயற்கையான குழந்தை பிறப்பு.

இது தவிர இன்னும் பல இடங்களில் தாயின் கருப்பையில் குழந்தை கருத்தரித்த நாள் முதல், மண்ணில் வந்து பிறக்கும் வரை நடக்கும் விஷயங்களை கூறியுள்ளார் அருணகிரியார்.

எடுத்துகாட்டு :

"........ மெழுக்கி லுருவென வலித்து எழுமதி
கழித்து வயிர்குட முகுப்ப வொருபதில்
விஞ்சைச் செயல்கொடு கஞ்சச் சலவழி
வந்துப் புவிமிசை பண்டைச் செயல்கொடு
விழிப்பொடு தலை அழுக்கு மலமொடு
கவிழ்த்து விழுதழு துகுப்பு அனைவரு -மருள்கூர
..................................................

(திருப்புகழ் - பொது)

"கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து மற்றும் பயின்று
கடையில் வந்துதித்துக் குழந்தை வடிவாகி
..................................................

(திருப்புகழ் - திருப்பரங்குன்றம்)

திருப்புகழில் குழந்தையை பெற உதவி செய்யும் தாதியரை "நரைமாதர்" என்றழைக்கிறார். இதனால், அன்றைய காலத்திலேயே தமிழ் நாட்டில் தாதிமைத் தொழில் (Midwife) இருந்தது நன்கு புலப்படுகிறது.

இதைப் பின்வரும் திருப்புகழில் காணலாம்.

"கருவாகியே தாயுத ரத்தினி
லுருவாகவே கால்கையுருப்பொடு
கனிவாய்விழி நாசியுட ற்செவி நரைமாதர்

கையிலேவிழ வேகிய ணைத்துயி
லெனவேமிக மீது துயிற்றிய
..................................................."

(திருப்புகழ் - பழமுதிர்ச்சோலை

திருப்புகழில் நோயியல்

இளவயதிலேயே அருணகிரியார் குஷ்ட நோயினால் அவதிப் பட்டுள்ளார். முருகனின் திருவருளால் அது நிவர்த்தியாகி பின்னர் முருகனின் புகழ் பாடும் திருப்புகழையும், இதர பல நூல்களையும் எழுதினார் என்பது வரலாறு.

இதனால் , நோயினால் அவர் பட்ட துன்பதையும், அவர் காலத்தில் காணப்பட்ட பலவித நோயகளையும் பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.



நோய் இன்னதென்று அடையாளங் கண்டபின்னரே அதற்கான மருந்தைக் கூறலாம். இதற்கு நோய்களைப் பற்றிய அறிவு அவசியம். இதுதான், இன்றைய மருத்துவம் கூறும் நோயியல் துறை. இந்த நோய்களைப் பற்றி, பதினைந்தாம் நூற்றாண்டிலேயே, அருணகிரி நாதர் தமது பாடல்களில் விவரித்துள்ளது வியத்தற்குரியது.

உடம்பென்றிருந்தால், நோயுமிருக்கும். நோயில்லாத வாழ்வு பெற, தூய வாழ்க்கை முறையும், இறைவனின் திருவடித் துணையும் அவசியம் என்பது அருணகிரியார் வாக்கு.

"இருமலு ரோக முயலகன் வாத
மெரி குண நாசி - விடமே நீ
ரிழிவி டாத தலைவலி சோகை
எழுகள மாலை இவையோடே

பெருவயி றீளை யெரிகுலை சூலை
பெருவலி வேறு மூலநோய்கள்
பிறவிக டோறு மெனைநலி யாத
படியுன தாள்க ளருள்வாயே"

.............................................

(திருப்புகழ் - திருத்தணி)

இருமலை ஏற்படுத்தும் ஆஸ்த்துமா போன்ற நோய்களை" இருமலு ரோகம் " என்கிறார். முயலகன் என்பது ஒருவகை வலிப்பு நோய். இந்த நோயுடையவர்கள், கை கால்ளை மடக்கிக் கொண்டு நடராஜப் பெருமானின் காலுக் கடியில் முடங்கிக் கொண்டு கிடக்கும் முயலகன் என்ற அரக்கனைப் போல இருப்பார்கள்.

எரிகுணம் என்று இவர் கூறுவது எரிச்சலைத் தரகூடிய நரம்பு நோய் (Neuropathy). நாசிவிடம் என்பது மூக்கில் ஏற்படும் ஒவ்வாமை (Allergy). விடாத தலைவலி, இன்றைக்கு நாம் பார்க்கும் மைக்ரேன் (Migraine) போன்ற தலைவலி நோய்கள்.

மற்றும், "எழு களமாலை" என்று கழுத்தைச் சுற்றி மலைபோல் எழுகின்ற " கண்டமாலை " எனக் கூடிய கழுத்திலுள்ள தைராய்டு சுரப்பி வீங்குவதைக் குறிப்பிடுகிறார். வயிறு பெருத்து (Obesity) இருப்பதை அந்த நாட்களிலேயே " பெருவயிறு நோய் " என்று சொல்லியிருக்கிறார்.

' ஈளை " என்பது சளி சம்பந்தப்பட்ட சுவாச நோய்கள். எரிகுலை என்பது குடல் புண்களால் வரும் குடல் எரிச்சல். சூளைப் பெருவலி என்று தொழுநோயைக் குறிக்கிறார்.

இந்த நோய்களையே மற்றுமொரு பாடலிலும் சொல்கிறார்.

" வலிவாத பித்தமொடு களமாலை விப்புருதி
வறள் சூளை குட்டமொடு - குளிர்தாகம்
மலிநீ ரிழிச்சல்பெரு வயிறீளை கக்குகளை
வருநீ ரடைப்பி னுடன் - வெகுகொடி

.............................................................

(திருப்புகழ் - திருவருணை)



இவ்வாறு நோய்களின் பட்டியல் நீள்கிறது. நீரிழிவு நோயைப் பற்றியும், எழுகள மாலையென்று தைராய்டு நோயைப் பற்றியும் திருப்புகழில் சொல்லி இருப்பது மீண்டும் குறிப்பிடத்தக்கது.

குளிர் காய்ச்சலை உண்டாக்கும் மலேரியா போன்ற நோய்கள் அன்றைய நாட்களிலும் இருந்திருக்கின்றன. குளிர் காய்ச்சலை, "குளிர்காசம்" என்கிறார். மூல நோய் பற்றியும், வயிற்றுப் புண் நோய் பற்றியும் சில பாடல்களில் கூற்றுக்கள் இருக்கின்றன.

உ.ம் :

" வாதம் பித்தமி டாவயி நீளைகள்
சீதம் பற்சனி சூலைம கோதர
மாசங் கட்பெரு மூலவி யாதிகள் குளிர்காசம்
மாறுங் கக்கலொ டேசில நோய்பிணி
யோடுந் தத்துவ காரர்தெ ஞூற்று
( திருப்புகழ்- பழநி)

விளக்கம் : சூலை- வயிற்றில் வேல் பாய்ச்சியது போல் வரும் வயிற்று வலி
மகோதரம்- பெருத்த வயிறு
பெருமூல வியாதிகள்- ஆசனத் தொளையில் வரும்மூல நோய்கள்குளிர் காசம்- குளிர் காய்ச்சல்)

பல பாடல்களில் வாத நோயைப் பற்றியும், இருமலைத் தரும் சுவாச நோய்களைப் பற்றியும், வயிற்றுத் தொல்லைகளைப் பற்றியும் குறிப்பிட்டுள்ள அருணகிரிநாதர் இன்றைக்கு அதிகம் காணப்பெறக்கூடிய இதய நோய்களைப் பற்றி தெளிவாகக் கூறவில்லை.

இது அன்றைய நாட்களில் இதய நோய்களைப் பற்றிய அறியாமையினால் இருக்கலாம். அல்லது, அன்றைய வாழ்க்கைமுறைகளில், இதயநோய் அதிகம் இல்லாத காரணத்தினாலும் இருக்கலாம்.

" தலைவலி மருந்தீடு " என்று திருப்புகழில், மருந்தினால் வரும் நோய்களையும், வெகுசலம் என்று நீரிழிவு நோயினையும், இரத்த சோகை, மஞ்சள் காமாலை போன்ற நோய்களைப் பற்றியும், மாயாவிகார பிணி என்று பால்வினை நோய்களைப் பற்றியும் கூறுகிறார்.

" தலைவலி மருந்தீடு காமாலை சோகைசுரம்
விழிவலி வறட்சூலை காயாசு வாசம்வெகு
சலமிகு விஷப்பாக மாயாவி காரபிணி
யணுகாதே
(திருப்புகழ்- பழநி

**நோய்களின் காரணம்**

கிருமிகள் நோய்களின் காரணமென்று, மேற்கத்திய விஞ்ஞானிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கண்டுபிடித்தார்கள். இந்தக் கூற்றையே பதினைந்தாம் நூற்றாண்டில் எழுதிய, வள்ளிமலைத் திருப்புகழில், உடம்பை " கிருமி வீடு " என்றும், பழநிமலைத் திருப்புகழில், " அரிய புழுவது நெளியும் உடல் ", என்றும், ( " குருதி மலசல மொழுகு நரகுடல்" என்று துவங்கும் பாடல் ), அருணகிரிநாதர் பாடுகிறார்.

மூப்பியல்



மனிதன், தூய வாழ்க்கை முறைகளால் நோயைத் தவிர்க்கலாம். ஆனால், முதுமையைத் தவிர்க்க இயலாது. இறை வழிபாட்டின்மூலம் முதுமையின் தாக்கங்களை எதிர்கொள்ளலாம்.

அருணகிரி நாதர் பாடல்களில் முதுமையின் விளைவுகளை விவரித்து, அதை எதிர்கொள்ள முருகப் பெருமானின் துணை வேண்டுமென்கிறார்.

" தொந்திசரிய மயிரே வெளிறநிரை
தந்தமசைய முதுகே வளைய இதழ்
தொங்கிவொருகை தடிவேல்வர மகளிர் நகையாடி

தொண்டுகிழவ னிவனாரென இருமல்
கிண்கிணெமு னுரையே குழறவிழி
துஞ்சுகுருடு படவே செவிபடு செவியாகி
......................................................................"

(திருப்புகழ் - திருச்செந்தூர்)

முதுமையின் அறிகுறிகள்:

தொந்தி சரியும், மயிர் வெளுக்கும், தந்தம்போல் பற்கள் உறுதியிழந்து அசையும், முதுகு வளையும் (osteoporosis), கண்ணொளி மங்கும் (விழி துஞ்சு குருடுபடும்) , செவி செவிடுபடும்.
இவையெல்லாம் எமன் மனிதனுக்கு விடும் தூது. இந்த அறிகுறிகள் தோன்றும்பொழுது இறைவழிபாடு ஒன்றே நம்மை எமனின் பாசக்கயிற்றிலிருந்து காப்பாற்றும் ஆயுதம் என்கிறார் அருணகிரியார்.

மரணம்

முதுமையைப் பற்றிப் பாடியவர், உடல் நிலையற்றது என்று மனிதனின் மரணத்தையும் பாடுகிறார்.

" விந்துப் புளகித இன்புற்றுருகிட" எனத் துவங்கும் குன்றுதோருடல் திருப்புகழிலும், "இத்தாரணிக்குள் மனு வித்தாய் முளைத்தெழுந்து," எனத் துவங்கும் பழநிமலைத் திருப்புகழிலும், ஒரு சராசரி மனித வாழ்வின் ஒவ்வொரு நிலையையும் எடுத்துக்கூறி, இறுதியாக, அவன் இறப்பையும். இறந்த பிறகு அவன் உடலுக்கு நேரும் கதியையும் விலாவாரியாகக் கூறுகிறார்.

இதன் மூலம் நிலையாமைத் தத்துவம் நன்கு புலப்படுகிறது. மனிதனின் முதுமையையும், இறப்பையும் இவ்வளவு விவரமாக,தெளிவாகக் காட்டும் பக்தி இலக்கியம் திருப்புகழ் ஒன்றாகத்தான் இருக்க முடியும்.

முடிவுரை



திருப்புகழ் பாக்கள் வெறும் சந்த நயத்துக்காக மட்டும் யாரோ ஒரு தமிழ்ப் புலவன் எழுதிய பக்தி இலக்கியமல்ல. அது ஒரு அமுத சுரபி. நாம் எந்தக் கோணத்தில் திருப்புகழைப் படிக்கிறோமோ, அந்தத் துறைக்கான தகவல்கள் அனைத்தையும் அதில் பெறலாம்.

ஒரு பக்தி இலக்கியமாகப் பார்த்தால், அது பக்தி இலக்கியம். சமரச சமய நோக்குடையவர்களுக்கு அது சமரச சமயநூல். சமுதாயப் புரட்சியாளனின் கண்ணுக்கு, அது சமுதாய நூல். இசை அறிஞனுக்கு, அது இசை நூல். அதைப்போல், மருத்தவ அறிவியல் கண்கொண்டு பார்ப்பவர்களுக்கு அது ஒரு மருத்துவப் பெட்டகம்.

மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை நடக்கக்கூடிய அனைத்து விஷயங்களையும், அறிவியல் பூர்வமாகத் திருப்புகழில் காணலாம்.

மெய்ஞானம் என்பது மூடநம்பிக்கைகளல்ல. கண்மூடித்தனமான சடங்குகளல்ல. விஞ்ஞானம் இன்றைக்குச் சொல்கின்ற உண்மைகளை அருணகிரிநாதர் போன்ற மெய்ஞானிகள் அன்றைக்கே உணர்வலைகளால் தொட்டு விட்டார்கள் என்பதே நிதர்சனமான உண்மை.

துணைநூற்பட்டியல்


திருமுருக கிருபானந்த வாரியார். திருப்புகழ் விரிவுரை. - பழநி, பழமுதிர்ச்சோலை, திருப்பரங்குன்றம், திருச்சந்துர். வானதி பதிப்பகம். சென்னை, *2000*.

புலவர். அ. மாணிக்கனார், திருப்புகழ் மூலமும் உரையும். - முதல் பாகம் முதல் நான்காம் பாகம் வரை. வர்த்தமானன் பதிப்பகம். சென்னை, *2000*.


குறிப்பு : அருணகிரிநாதர் அருட்களஞ்சியம் என்ற தொகுப்பு நூலுக்கு எழுதிய கட்டுரை





# ஏன்? ஏதற்கு?
# சமய விளக்கம்



தொகுப்பு :
தொண்டர்மாமணி ருக்குமணி கிருஷ்ணசாமி

## சட்டி (சஷ்டி) விரதமும் சூரன் அழிவும்

முருகனுக்குப் பல பெயர்கள் உண்டு. அவை காலங்கள் தோறும் வளர்ந்தவை. புராண அடிப்படையில் வளர்ந்தவை. அவ்வகையில் தீமைகளைப் போராடி அழிக்கும் வல்லமை பெற்ற கடவுளாகத் தமிழர் முருகனை வழிபட்டபோது அவன் 'கந்தன்' எனப்பட்டான். கந்தம் என்றால் தோள். கந்தன் தோள் வலிமை உடையவன். அவன் ஒருகால் சூரபன்மன் என்னும் அசுரனைப் போராடி வென்றான். அந்த வெற்றி விழாவே கந்த சட்டி (சஷ்டி) யாகக் கொண்டாடப்படுகிறது.

இவ்விழா ஐப்பசித் திங்கள் அமாவாசைக்குப்பின் தொடங்கி ஆறு நாட்கள் கொண்டாடப்பெறும், இந்த ஆறுநாள்களும் பல உருவில் வந்த சூரபன்மனோடு போராடி இறுதியில் அவனை அழித்தான் முருகன். சட்டி என்றால் ஆறு என்று பொருள். இந்த ஆறு நாட்களையும் நோன்புக்குரிய நாள்களாகத் தமிழர் கொண்டாடுகின்றனர். வெள்ளிக்கிழமையும், செவ்வாய்க்கிழமையும் முருகனுக்குரிய நாட்கள். கார்த்திகை நட்சத்திரம் முருகனுக்குகந்த நட்சத்திரம்.

## முருகனும் 'காவடி'யும்

'இடும்பன்' என்ற அசுரன் போர் செய்வதற்குப் போதிய துணிவின்றி, அகத்தியரிடம் சரண் புகுந்தான். அகத்தியர் அவனுக்கு அரியதொரு பணியினைத் தந்தார். அவர் சிவபெருமானிடம் பெற்றவை இரு மலைகள். 'சிவகிரி' & 'சத்திகிரி'. அவற்றைக் கேதாரத்திலேயே வைத்திருந்தார். அவற்றை எடுத்து வருமாறு பணிக்கப்படவே, இடும்பன் 'காவுதடி'யில் இரண்டு புறங்களிலும் வைத்துக் கட்டி எடுத்து வந்தான். சுமை தாங்க முடியாமல் பழனியில் இறக்கி வைத்தான். அதனை எடுக்க முயன்றும் முடியவில்லை. சுற்றும் முற்றும் பார்க்கையில் சிறுவன் ஒருவன் உச்சியில் இருக்கக் கண்டான். இடும்பன் விரும்பியும் சிறுவன் - குமரன் - முருகன் இறங்கவில்லை. போர் நடைபெற்றது. அசுரன் மாண்டான். இடும்பியின் வேண்டுக்கோளுக்கு இணங்கி இடும்பனை உயிர்ப்பித்து அருள் புரிந்த திருவூர் பழனி. அதனால் அன்று முதல் இன்று வரை அன்பர்கள் பழனியிலும் பிற முருகன் பதிகளிலும் 'காவடி' செலுத்தி வருகின்றனர். அப்போது, அண்ணாமலை ரெட்டியார் அருளிய 'காவடிச் சிந்து' பாடப் பெறுவது தனிச் சிறப்பு.

## திருக்கார்த்திகை தீபம்



ஆக்கல் தொழில் புரிவதால் தானே பெரியவன் என்று பிரம்மாவும், காத்தல் தொழில் புரிவதால் தானே பெரியவன் என்று திருமாலும் போட்டியிட்டு முடிவுகாணச் சிவபெருமானிடம் சென்றார்கள். தனது முடியைப் பிரம்மாவும், அடியைத் திருமாலும் கண்டு வரப் பணித்த சிவன், விண்ணுக்கும் மண்ணுக்குமாக பேருருப் பெற்று நின்றார். இருவரும் தோல்வியோடு திரும்பினர். அப்போது அழகாகக் குருகித் திருமாலுக்குக் காட்சி தந்தார் திருவண்ணாமலையில் சிவபெருமான். அதுவே கார்த்திகை மாதத்தில் வரும் திருக்கார்த்திகை தினம். இறைவனை ஜோதி வடிவில் கண்டு வழிபடுவதால் மக்கள் அன்று தங்கள் இல்லங்களில் தீபங்கள் ஏற்றி வைத்து வழிபாடு செய்கின்றனர்.

சிவபெருமான் திரிபுர அசுரரை எரித்த விழாவும் இத்துடன் இணைந்து வருகிறது. ஓலைகளைக் கட்டி அதற்கு நெருப்பிட்டுக் கொளுத்தும் இதனை சொக்கப்'பனை' என்று அழைக்கிறார்கள்.

### வழிபாட்டு விதிகள்

- நீராடி, தோய்த்துலர்ந்த தூய ஆடை உடுத்தி, தூய்மை உடலுடனும் உளத்துடனும் கோயிலை அடைதல்.
- கோயில் கோபுரத்தைக் கண்டவுடனே அதனை வணங்கி கோயிலுக்குள் நுழைதல். மீண்டும் ஒருமுறை கை, கால்களை கழுவி தூய்மை செய்து கொள்ளல்.
- கொடிமரத்தை அடைந்து, உடலுறுப்புகள் நிலத்தில் படும்படி விழ்ந்து வணங்கல்.
- திருமுறைப் பதிகங்களை ஓதிக்கொண்டே இடப்பக்கமாக் கோயிலை முதல் முறையாக வலம் வருதல்.
- பலிபீடத்தை அடைந்து, நின்று வணங்கல்.
- விநாயகப் பெருமானை திருவினை அடைந்து, வணங்குதல். (விநாயகப் பெருமான் திருமுன்னிலையில் மட்டுமே தலையில் இருகைகளாலும் காதுகளை மாற்றிப் பிடித்துக்கொண்டு மூன்று முறை தோப்புக்கரணம் போட வேண்டும்.மற்றைய மூர்த்திகளின் சந்நிதியில் இவ்வாறு தலையில் குட்டிக் கொள்ளலும், தோப்புக்கரணம் போடுதலும் ஆகா)
- ஆலயத்தின் சுற்றுப்பிரகாத்தில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளை வணங்கல்.
- மூலஸ்தான மூர்த்தியை வணங்கல். (பன்னிரு திருமுறைப் பாடல்கள் அல்லது பஞ்சபுராணப் பதிகங்களை ஓதல் வேண்டும்)
- இரண்டாம் முறையாகக் கோயிலை வலம் வருதல். வரும் போது பிரகாரத்திலுள்ள மூர்த்திகளை வணங்கி இரண்டாம் முறை கோயில் வலம் வருவதை முடித்தல்.
- மூன்றாம் முறையாகக் கோயிலை வலம் வருதல்.
- இறுதியாகக் கொடி மரத்தினருகில் வந்து நின்று, சாஷ்டாங்க வணக்கம் செய்தல். (கொடி மரத்தின் முன்னர்த் தவிர வேறு எந்த மூர்த்தியின் முன்னிலையிலும் எட்டுறுப்பும் நிலந்தோயத் தரையில் படுத்து வணங்குதலாகாது.
- இறை எண்ணத்துடன் இல்லம் திரும்புதல்.



உ
முருகா



# திருமுருகனும் தெய்வத் தமிழும்
(தொண்டர்மணி ச. சுப்பையா)

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே

இறைவன் அழகோடும், இளமையோடும் தோன்றுகின்ற தோற்றத்தை முருகனிடம்காண்கின்றோம். "பண்டைத் தண் மணம் கமழ் தெய் வத்து இள நலம் காட்டி" எனப் பாடுகிறது திருமுருகாற்றுப் படை. நடுவே முருகனும் ஒரு பக்கத்தில் வள்ளி நாயகியும், பிறிதொரு பக்கத்தில் தெய்வானையும், கையில் வேலும் கொண்டு மயில் வாகனத்தில் வீற்றிருக்கும் திருக்கோலமும், ஆறுமுகங்களும், பன்னிரெண்டு கைகளும் உடைய திருக்கோலம், ஆண்டிக் கோலத்தில் தண்டாயுதத்தைக் கையில் கொண்டு நிற்கும் தண்டாயுதபாணி கோலமும், பொதுவாக அடியார்கள் உள்ளத்தைக் கவர்வன. இச்சா சக்தி, கிரியா சக்தி ஞானசக்திகளோடு விளங்குபவன் என்பதையே வள்ளி - தெய்வானை - வேல் உணர்த்தும் என்பர் சான்றோர்.

அரக்கர்களைக் கொன்றொழித்து தேவ சேனாதிபதியாக வாழ்ந்த முருகப் பெருமானை வணங்கும் அடியார்கள் அவ்வெற்றிக்குத் துணையாக இருந்த வேலையும் வழிபடுவர்.

தோகை மேல் உலவும் கந்தன்
சுடர்க்கரத் திருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும் வேலை
வணங்குவது எமக்கு வேலை

வெற்றி வடிவேலன் - அவனது
வீரத்தினைப் புகழ்வோம்
சுற்றி நில்லாதே போ - பகையே
துள்ளி வருவது வேல்

என்ற மகா கவி பாரதியாரின் பாடல்களும் இங்கு எண்ணத்தக்கது. இவ்வாறெல்லாம் வழி பட்டாலும் முருகன் பரம் பொருளின் இளைய, அழகிய தோற்றம் என்பது உணரத் தக்கதாகும்.

தமிழ்மொழி என்றும் இளமை மாறாத மொழி. எம்பெருமான் முருக வேலும் அகலாத இளமை உடையவன்.

| | | |
|---|---|---|
| தமிழ் மொழியில் உயிர் எழுத்துக்கள் | - | 12 |
| முருகப்பெருமானின் தோள்கள் | - | 12 |
| தமிழ்மொழியில் மெய்யெழுத்துக்கள் | - | 18 |
| முருக வேலுக்கு திருமுகம் ஒவ்வொன்றிலும் 3 கண்களாக மொத்த நயனங்கள் | - | 18 |
| தமிழில் இன எழுத்துக்கள் : வல்லினம் (6), மெல்லினம் (6), இடையினம் (6) | - | 6 |
| திருமுருகனின் திருமுகங்கள் | - | 6 |

கந்தவேல் கரத்தில் உள்ள வேல் வேறு எந்த தெய்வத்துக்கும் இல்லாத சிறப்பு ஆயுதம். வேல் என்றே மக்கட்குப் பெயரிடுதல் மரபு. வேறு எந்த மொழியிலும் இல்லாத தனி நிலை ஆயுத எழுத்து தமிழில் மட்டுமே உண்டு. ஆய்தம் ஃ. இச்சை, கிரியை, ஞானம் என்ற மூன்றும் மூன்று புள்ளிகளாகச் சேர்ந்தது. இது வேலின் உருவை ஒத்தது.

கண்ணிகள் மெய்யும், சென்னிக் கண நிகரினத்தில் கூறும்
திண்ணமை தோள்களே போல் திகழ் தரு உயிரும், வேறொன்(று)
எண்ணுதற் கரிய தான எஃகமும் இயலிற் காட்டும்
புண்ணிய முனிக் கோன் செவ்வேள் பொற்பதத் தடிமையாகும்.

(கச்சியப்பர்)



எனவே, முருகன் வேறு, தமிழ் வேறு அல்ல. முருகனே தமிழ், தமிழே முருகன். உருவம் இல்லாத அருட்பெருஞ்சோதி ஆண்டவன். ஆறுமுகங்கள், பன்னிரெண்டு தோள்கள். பதினெட்டுக் கண்கள் கொண்ட இந்த அருள் உருவத்தை உலகம் உய்யும் பொருட்டு எடுத்துக் கொண்டான்.

அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்
பிரம்மமாய் நின்ற சோதிப் பிழம்ப தோர் மேனி ஆகக்
கருணை கூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரெண்டும் கொண்ட
ஒரு திருமுருகன் வந்தாங்(கு) உதித்தனன் உலகம் உய்ய

(கச்சியப்பர்)

முருக வழிபாடு தமிழகத்தில் மிகப் பழமையான வழிபாடாகும். தண்டமிழ்க் காப்பியமான சிலப்பதிகாரத்தில்

அணிமுகங்கள் ஒரு ஆறும், ஈராறு கையும்
இணை இன்றித் தான் உடையான் ஏந்திய வேல் அன்றே
பிணிமுக மேற் கொண்டு, அவுணற் பூடு அழியும் வண்ணம்
அணி விசும்பில் கோன் ஏத்த மாறு அட்ட வெள் வேலே

(சிலப்பதிகாரம்)

எனப் போற்றப்படுகின்றான்.

இயற்கை பல அழகிய வடிவங்களாகக் காட்சியளிக்கின்றது என்பதை நாம் அறிவோம். இயற்கை உடல், அதன் உள்ளுறை உயிர் என்பது தமிழ்த் தென்றல் திரு. வி. க. கண்ட உண்மை. உயிரை முருகு அல்லது முருகன் எனக் கொண்டனர் பழந்தமிழ் நாட்டினர். முருகை உடையவன் முருகன். 'முருகு' என்ற சொல் மணம், இளமை, கடவுள் தன்மை, அழகு என்று பொருள் படும் என்றும். இந்த நான்கு பொருள்களடங்கிய ஒரு சொல்லால் தமிழ் மக்கள் முழுமுதற் பொருளை வணங்கினர் என்று கூறி மகிழ்ச்சியும் வியப்பும் உறுவர் தமிழ்த் தென்றலார்.

முருகன் தமிழ்க் கடவுள். அவன் மலைநிலைக் (குறிஞ்சி) கடவுள் என்பதிலிருந்தே முருகனின் தொன்மை நன்கு விளங்கும்.

திருமுருகன் ஆட்சி செய்து அருள் புரிந்த இடங்களே அறுபடை வீடுகளாகும். அவை:

1. திருப்பரங்குன்றம் - தெய்வயானையை மணந்தது
2. திருச்சீரலைவாய் (அ) திருச்செந்தூர் - சூரனை வென்றது
3. திருவாவினன் குடி (அ) பழனி - ஆண்டிக் கோலம் பூண்டது
4. திருவேரகம் (அ) சுவாமி மலை - தந்தைக்கு உபதேசம் செய்தது
5. குன்று தோறாடல் (அ) வள்ளி மலை - வள்ளியை மணந்தது
6. பழமுதிர் சோலை (அ) அழகர் கோயில் - அவ்வைக்கு அருள் புரிந்தது

இறைவனுக்கு (முருகனுக்கு) 3 கண்கள். அதனால் அவனுக்கு முக்கண்ணன் என்று பெயர்.

வலக்கண் - சூரியன்
இடக்கண் - சந்திரன்
நெற்றிக்கண் - அக்கினி. இது ஞானக்கண்

சிவ பெருமான் மூன்று முறை தன் நெற்றிக் கண்ணைத் திறந்தார்.
முதன்முறை கண்ணைத் திறந்தார் - மன்மதன் எரிந்தான் - அழித்தல்
இரண்டாம் முறை கண்ணைத் திறந்தார் - முருகன் தோன்றினான் - ஆக்கல்
மூன்றாம் முறை கண்ணைத் திறந்தான் - நக்கீரன் அச்சுறுத்தப் பட்டான் - அருளல்



சூரன் முருகனைத் தன் பரம விரோதியாகக் கருதியவன். சூரனது படைகளும், முருகனது படைகளும் மோதுகின்றனர். சூரன் களத்தில் இறங்குகின்றான். முருகன் அவன் எதிரில் தோன்றுகிறான். முதன் முறையாக முருக வேளைக் காண்கிறான். இச்சந்திப்பை கச்சியப்பர் பல பாடல்களால் வருணிக்கிறார். அவைகளில் இருபாடல்கள் தேனாய் இனிக்கின்றன. நான் பெற்ற இன்பம் நீங்கள் அடைய வேண்டாமா? இதோ அவ்வினிய பாடல்கள்.

**கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் தன்னை,**
**பாலன் என்றிருந்தேன், அந்நாளில் பரிசிவை உணர்ந்திலன்,**
**மால், அயன் தனக்கும், ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்,**
**மூல காரணமாய் நின்ற மூர்த்தி, இம்மூர்த்தி அன்றோ.**

சூரன் மாபெரும் வீரன். எவர்க்கும் அஞ்சாத நெஞ்சுரம் வாய்ந்தவன். முருகனைக் கண்டு நெகிழ்ந்த மறுகணமே அவனது மனக்குரங்கு வேதாளம் மரத்தில் ஏறிய கதையாய் விட்டது.

**சூழுதல் வேண்டும், தாள்கள் தொழுதிடல் வேண்டும், அங்கை**
**தாழுதல் வேண்டும், சென்னி துதித்திடல் வேண்டும், தாலும்**
**ஆழுதல் வேண்டும், தீமை அகன்று நான், இவர்க்காளாகி**
**வாழுதல் வேண்டும், நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே**

**கோலமா = அழகிய**
**பரிசிவை = பெருமை**
**மால், அயன் = விஷ்ணு, பிரம்மா**
**சூழுதல் = வலம் வரல்**
**அங்கை = அழகிய கரங்கள்**
**தாழுதல் = தொழுதல்**
**சென்னி = தலை**
**தாலும் = நாக்கும்**

முருகனுக்கு உரிய பல பெருமைகளுள் தலை சிறந்தவை:

1. அவன் தமிழ்க் கடவுள்
2. உலகம் அனைத்திற்கும் ஒப்புயர்வற்ற தனிப்பெ பெரும் தலைவனாயும், தமிழ் கூறும் நல் உலகத்திற்குத் தனிச்சிறப்பாக உரிய தமிழ்த் தெய்வமாவான்.
3. தமிழ்மொழியை அகத்தியருக்கும், பிறர்க்கும் அறிவுறுத்திய கடவுள்.
4. ஓங்காரம் என்னும் பிரணவத்தின் பொருளை சிவபெருமானுக்கு தமிழ் மொழியின் வாயிலாகவே முருகப் பெருமான் உபதேசித்தார்.

**கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரிய**
**கொஞ்சித் தமிழால் பகர் வோனே.**

(திருப்புகழ்)

முருகப் பெருமானின் ஆறு திருமுகங்களையும் அருணகிரிநாதர் மிக எளிமையாக, குழந்தைகள்முதல் முதியவர்வரை அறியும் வண்ணம் மிக அழகாகப் பாடினார்.

**ஏறுமயில் ஏறி விளையாடும் முகம் ஒன்றே**
**ஈசருடன் ஞான மொழி பேசு முகம் ஒன்றே**
**கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்றே**
**குன்றுருவ வேல் வாங்கி நின்றமுகம் ஒன்றே**
**மாறு படு சூரரை வதைத்தமுகம் ஒன்றே**
**வள்ளியை மணம் புரிய வந்த முகம் ஒன்றே**
**ஆறுமுகமான பொருள் நீ அருளல் வேண்டும்**
**ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே**

இந்த ஆறுமுகங்களையும் புதிய கோணத்தில் பார்த்து மகிழ்கிறார். நமது கவியரசு கண்ணதாசன். அவரது இரு இனிக்கும் பாடல்கள்.



ஆறுமுகமான பொருள் வான்மழையாய் வந்தான்
அழகன் சிவன் முருகன் எனும் இனிய பெயர் கொண்டான்
காலமகள் பெற்ற மகன் கோல முகம் வாழ்க
கந்தன் என குமரன் என வந்த முகம் வாழ்க
தாமரையில் பூத்து வந்த தங்க முகம் ஒன்று
தண்ணிலவில் சாறெடுத்து வார்த்தமுகம் ஒன்று
பால் மணமும் பூமணமும் படிந்தமுகம் ஒன்று
பாவலர்க்குப் பாடம் தரும் பளிங்கு முகம் ஒன்று
வேல் வடிவில் கண்ணிரண்டும் விளங்கு முகம் ஒன்று
வெள்ளி ரதம் போல வரும் பிள்ளை முகம் ஒன்று

மங்கையரின் குங்குமத்தைக் காக்கும் முகம் ஒன்று
வாழ்கின்ற ஏழை முகம் பார்க்கும் முகம் ஒன்று
சஞ்சலத்தில் வந்தவரை தாங்கும் முகம் ஒன்று
சாதிமத பேதமின்றி பார்க்கும் முகம் ஒன்று
நோய் நொடிகள் தீர்த்து வைக்கும் வண்ண முகம் ஒன்று
நூறு முகம் காட்டு தம்மா ஆறுமுகம் இன்று

இது கவியரசர் காட்டும் அறுமுக தத்துவம்

இந்த அழகிய திருமுகத்தை வள்ளல் பெருமான் தனது சிறு பிராயத்திலேயே கண்ணாடியில் கந்தப் பெருமானைக் காண்கிறார். இதோ அந்த தித்திக்கும் தேன் தமிழ்ப்பாடல்.

சீர் கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும், திகழ்கடப்பந்
தார்கொண்ட பன்னிரு தோள்களும் இரு தாமரைத் தாள்களும் ஓர்
கூர் கொண்ட வேலும் நற் கோழிக் கொடியும், அருள்
கார் கொண்ட வண்மைத் தணிகாசலமும் என் கண்ணுற்றதே.
(அருட்பா)

முருகனே தமிழ், தமிழே முருகன்
முருகனே சிவன், சிவனே முருகன்

ஆதாரம்:


1. வாரியார் சுவாமிகளின் நூல்கள்
2. தமிழ்த் தென்றல் திரு. வி. க. நூல்கள்
3. மகாகவி பாரதியர் கவிதைகள்
4. கவியரசு கண்ணதாசன் கவிதைகள்
5. திரு. அருட்பா.


## நம்பிக்கை கொள்ளலாமா?

நோயாளி வைத்தியனிடத்தில் நம்பிக்கை இல்லை என்று சொன்னால் எத்தனை வருந்தத் தக்கதோ அத்தனை வருந்தத் தக்கதே கடவுள் மேல் நம்பிக்கை இல்லாததும். உலகில் நம்பிக்கை இல்லாமல் ஒரு கணம் கூட வாழவே முடியாது. முன்பின் தெரியாத டாக்சி டிரைவரை நம்பித் தூங்குகிறான். முன்பின் கம்பவுண்டர் தருகிற மருந்தை வாங்கிச் சாப்பிடுகிறான். ஒரு கை காட்டி மரத்தை நம்பி வழி நடக்கிறான். எனவே, நம்பிக்கை மனிதனை உயர்த்தும்.

- திருமுருக கிருபானந்த வாரியார்



## அநுபவஞான அருணகிரியார்
(கவிஞர் வே. மகேந்திரன், ஈப்போ)

இசையால் தமிழை வளர்த்தவர்
தமிழால் இசையை வளைத்தவர்
அசையா நாவை அசைத்தவர்
அருமைத் தமிழால் குழைத்தவர்
கல்லாம் நெஞ்சைக் கரைத்தவர்
கவியால் அமுதம் நிறைத்தவர்
எல்லாம் உணர்ந்து களித்தவர்
எல்லார்க்கும் பகிர்ந்தளித்தவர்
சொல்லால் சிலம்பம் ஆடுவார்
சுவையால் வண்ணம் பாடுவார்
கல்லார் நெஞ்சும் களிக்கவே
கவியில் சந்தம் ஊட்டுவார்
தன்னந் தனனா தந்தானா - தமிழ்க்
கவிதை இன்பம் செந்தேனா
வண்ணக் கவிதை மூலவனா - தமிழ்
வடிவாய்வந்த வேலவனா
அநுபவ ஞான அருட்சுடரே - முருகன்
அருளினைப் பாடும் திருப்புகழே
இனியநல் வண்ண இசைப்பாடல் - தமிழ்
இசையாய்க் கனியும் அருட்பாடல்

ஞானானு பவங்க ளெல்லாம்
நானா விதத்தில் தமிழ்க்
கானாமிர்த மெனப் பொழிந்தார் - அருட்
கவிஞர் அருணகிரிநாதர்!
கோலமார் திரு முருகனைத் தமிழ்
கொஞ்சு பாடலில் புனைந்தவர்
சீலமார் தெய்வயானையோடு வள்ளி
சிறப்பெல்லாம் மாந்தர் போற்றி
ஞாலமீதுறு மாந்தர் யாவரும்
நாளும் நாளும் மேல்நிலைபெற
மூலமாகிய ஞானவேலவன்
மேல் திருப்புகழ் அணிந்தவர்

## அருணகிரிநாதர் புகழ் வாழ்க

அருணகிரி நாதரெனும் பெரிய அருள் ஞானியர்க்கு
அடியவர்கள் எடுத்த விழா வாழ்க! வாழ்க
அறுமுகனின் திருப்புகழை அமுதத்தமிழ்க் கவிபாடி
அருச்சித்த அருட்பெரியார் வாழ்க! வாழ்க!
தருணமிது அடியவர்கள் தமிழ்க்குமரன் பெருமையெல்லாம்
தமிழமுத மாய்ப்பருகி வாழ்க! வாழ்க!
குருமுனியாய்ச் சிவனறியப் பிரணவத்தை ஓதியநற்
குமரகுரு சாமிபுகழ் வாழ்க! வாழ்க!

வள்ளிமயி லோடமர்ந்து புள்ளியில் வேலவனை
வண்ணக்கவி பாடியருள் பெற்றோய் வாழ்க!
உள்ளியதைத் தந்தருளும் ஊர்திமயில் வேலவனை
உள்ளத்திலே வைத்தவர்கள் வாழ்க! வாழ்க!
அள்ளியள்ளித் தருகின்ற அன்பர்மனத் தமர்கின்ற
அருள் தண்ட பாணி புகழ் வாழ்க! வாழ்க!
உள்ளுந்தொறும் உவக்கின்ற உள்ளமெலாம் இனிக்கின்ற
ஒப்பரிய திருப்புகழை தந்தோய் வாழ்க!

அமுதம் எனப்புகழும் அரியதிருப்புகழை
அருளும் அருணகிரி நாதர்
அமுதம் அமுதம்எனப் பருகும் அடியவர்க்கே
அருளும் வள்ளிமணவாளர்
குமுத மலர் முகத்துக் குறவர் திருக்குலத்துக்
கொடியை மணந்த திரு வாளர்
நமது குலக்கொடியை மணந்த உரிமையொடு
நாட்டு(ம்)க் கோட்டை நகர்ச் சீலர்

சென்ற விடமெல்லாம் செல்வ வளர்ந்தேடிச்
சிறந்து வாழ்ந்திட்ட சீலர்
என்றபோதுமவர் இனியதானறம்
இயற்றிவாழ்ந்த அறவாணர்
குன்று தொறும் நின்ற தண்டபாணிக்கருள்
கோயில் கட்டி விழாக் காண்பர்
நன்று நன்றுஎன கல்விக் கோயில்பல
நாட்டிவைத்துயர் மாண்பர் !!

## ஈப்போ முருகன் துதிப்பாடல்
பாதி மதி நதி போது மணிசந்தம்



மேக மதுமுடி சூடு மலையிடை
யாக வளநகர் - ஈப்போவில்
மேதையருட்கவி பாடுதிருப்புகழ்
மேன்மையுற விழா மிக வாழ்க

தோகை மயிலாடு வேலுமுறவருள்
தூய மனமுறு முருகோனே
தோடு மிக வொளிர் தோழி மயிலோடு
சூழ வரருள் தருவோனே

வேகமுறவுனைத் தேடிவருமடி
யார்தம் வினைகெட அருள்வோனே
வேத முறைசிவ ஆதிகுல குமரேசா
சாக அருள்புரி

நாக அணியொடு தேசு பிறை முடி
சூடு சிவனுயர் மகனே வா
நாடி வருபவர் பீடு பெறவருள்
ஞானசிவகுரு பரனே வா!



# நாட்டுப்புற வரலாற்றில் நற்றமிழ்க்குமரன்

(இரத்தின. மனோகரன், ஈப்போ).



"தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்ற மணிவாசகப் பெருமானின் உலக இறைமைக் கொள்கை போன்றே சிவத்திருவின் பேராற்றலாம் திரிபுரம் எறித்த விரிசடைப் பெருமானின் செல்வமைந்தன் செழுந்தமிழ் வளர்த்த சிங்கார வேலன் குன்றுதோறும் குடியிருக்கும் மலைக்கிழவோன் முருகப்பெருமான், நம்நாட்டு நாட்டுப்புற மக்கள் உள்ளங்களில் நடமாடும் பெற்றிமை பற்றிப் பார்ப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

"வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுழி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள" என்ற
சிலப்பதிகாரம் செப்பும் செய்தி செந்தில்குமரன் செந்தமிழ்க் குமரனாக அமைந்து முத்தமிழ்க்கும் முதல்வனாக நின்று தமிழ்ச்சங்கம் நிறுவி "குமரம்" என்னும் நூலையும் எழுதினார்.

"முத்தமிழை ஆயும் வரிசைக்கார" என்று திருச்செந்தூர் திருப்புகழ் "இருசெவி குளிர இனிய தமிழ் பகர்வோன்"என்பதும், செந்தில் வேலவனின் சீரிய ஆற்றலைக் குறிக்கும் எனக் கொள்ளலாம். திரிபுரம் எறித்த விரிசடைப் பெருமானின் செழுந்தமிழ்க் குமரன் "வழுதியர் தமிழின் ஒருபொருள் அதனை வழிபட மொழியும் குமரேசா" என்ற குன்றுதோராடல்திருப்புகழை ஆயுமிடத்து குமரவேள் தூயதமிழ் அறிவர்களில் ஒருவராக திகழ்ந்துள்ளது தெளிவாகும்!

சங்கம் தோற்றி தமிழ் வளர்த்த தலைவனுக்கு தென்னக மக்கள் தங்கள் அன்புணர்வைத் தெரிவிக்கும் முகத்தான போற்றிப் புரக்கும் விழாவே தைப்பூசமாகும். தமிழ் சார்ந்தோறும், சமயம் சார்ந்தோறும் ஒருமுகமாகக் கொண்டாடி மகிழும் முருக போற்றியை பல்வேறு விழாவாக நடத்தப் படுகின்றது. "தைப்பூசம் காணலையோ எம்பாவாய்" என்பது சுந்தரர் பொற்றும் முருக துதியாகும்.

நாட்டுப்புற மக்கள் அன்றாடும் தம்வாழ்வியல் துறைகள் தோறும் தந்தைக்கே ஞானம் உரைத்த தமிழ் முருகனைப் பாடிப்பரவாத நிகழ்ச்சியே இல்லை எனலாம்.

நாட்டுப்புற பாடல்கள் பல்வேறு உணர்ச்சிகளால் பாடப்பெறும். அவற்றை நாட்டுப்பாடல், நாட்டார் பாடல், நாடோடிப் பாடல், சிற்றூர்ப்பாடல், கல்லார்ப்பாடல், செவிவழிப்பாடல், மக்கள் பாடல் என்றவாறு வகைப்படுத்தியுள்ளனர்.

அருள் பெருக்கும் முருகனின் பெருமையை அன்னையுள்ளம் தான் பெற்றெடுத்த குழந்தைச் செல்வத்தின் அழுகையை அமர்த்த -
"வெள்ளி முழுகிக் கண்ணே
வெகுநாள் தவமிருந்து
தைப்பூச மாடிக் கண்ணே
தவம் பெற்று வந்தவளே" என்று பாடி மகிழும்

மற்றொரு உள்ளம் -
"வாருமையா கந்தா
வரம்கொடுக்கும் வேலவரே
தீருமையா இவன் பிணியை
திருச்செந்தூர் வேலவரே" என்கிறது



குழந்தை தன் பொக்கை வாயைத் திறந்து புன்சிரிப்பு உதிர்ப்பதை பார்த்து உவப்புறும் தாய்
"பச்சை நிறம் வள்ளி
பவள நிறம் தெய்வானை
சோதி நிறம் வேலவரு
சொன்ன வரம் தந்தாரோ" என்கின்றாள்.

உழவர் பெருமக்களும் தங்களின் முருக பக்தியை காவடி எடுப்பதன் வழி உணர்ச்சிப் பெருக்கத்தை காட்டி மகிழ்கின்றனர் "கந்தைத் துணியுடுத்தி - வேலவர்
காவடி தோளிவிட்டு
ஆயர்த்திருச் சோலையிலே - என்அப்பன்
ஆனந்தமாய்ப் பாடுகிறானே" என்பர்

இளங்காளை ஒருவன் தனக்குரிய மாமன் மகளைப் பார்த்து -
"கஞ்சிக் கலயங்கொண்டு - வள்ளியவள்
வரப்புக்குப் போகையிலே
அத்தை மகன்போல - வேலவர்
அவளைத் தொடர்ந்தாராம்" என நகைச்சுவை ததும்ப பாடுகிறான்.

வாழ்வில் ஏற்படும் துன்பத்தைப் போக்கி வளம்தர வேண்டும் என்கிற மனவுணர்வை உள்ளீடாகக் கொண்ட தலைவியின் நெஞ்சவுணர்வை -
"எட்ட்டிக் குச்சுகுள்ளே சுப்பையா
எப்படி நானிருப்பேன்
தங்கமயிலேறிச் சுப்பையா
வந்திட வேணும்பய்யா" என்று முருகனை வேண்டும் ஏழ்மை உள்ளத்தைக் காண்கின்றோம். ஒரு நல்ல

இல்லத்தின் மனவுணர்வில் முருகன் துணை நின்று உற்றுழி உதவும் மாட்சியை -
"வெள்ளிக் கிழமையின்று - வள்ளியவள்
வீடு மெழுகையிலை
அத்தைமகன் போலச் - சுப்பையா
கூட மெழுகுறாராம்" இவ்வாறு நாட்டுப்புற மக்கள் வாழ்வில் முருகியல் இடம்மெற்று தெய்வமணம் பரப்புகின்றது.

இயல்பார்ந்த இறைநெறி அறிவு சார்ந்த நிலையில் எல்லார் உள்ளத்திலும் நிறைந்திலங்கி எழில் பெற, தென்னாடுடைய சினாக அமைந்து எந்நாட்டவர்க்கும் இறைமையாய் ஒளிரும் ஆதிநாயகனாம் சிவபெருமானின் செல்வனாம் குறிஞ்சித் தலைவன் முருகப் பெருமானை வாழ்த்தி வளம்பெற்று வாழ்வோம் வளர்வோம்.

"இருக்கிறார் முருகர்
பத்து மலைபேல்!
போவது மக்கள்
கல்லுமலையை நோக்கி!
நடக்கும் மனுவெள்ளம்
தண்ணீர்மலை தண்டம்!
போகும் மனுவெல்லாம்
பொன்மலைக்கே தண்டம்!
முத்தேங்காய் உடைத்து
வேலவரை வணங்குவோம்!
வேலவர் வழித்துணை
வருவார்!



# "அந்தாதி தந்த அருணகிரி"

அருள்நெறிச் செல்வர்
திருமுருக மா.திருநாவுக்கரசு {எ}மா. தி.அரசு,
சித்தியவான்.



தமிழ் தந்த தலைவனாம் குறிஞ்சிக் குமரனை தலந்தோறும் சென்று பாடிப் பரவிய சான்றோர்களில், திருமுருகாற்றுப்படை பாடிய மதுரைக் கணக்காயனார் மகனார் புலவர் நக்கீரரும், 205 தலங்களைப் பற்றிப் பாடிய அருணகிரிநாதரும் குறிப்பிடத் தக்கவர்கள்.

முருக வழிபாடான கௌமார சமயத் தத்துவத்தை தமிழர்களிடையே தழைக்கச் செய்த பெருமை அருணை முனிவரையே சாரும். அருணகிரிநாதர் அருளிய ஒன்பது நூல்களில் பலாச்சுளை போன்றது கந்தரந்தாதி. சிறிது முயற்சி செய்து கடினபததை புரிந்து கொண்டு அர்த்தமுடன் படித்தால் இந்த தேன்பலா தித்திக்கும்.

அந்தாதி என்பது முதற்பாட்டின் இறுதிச் சொல்லும் அடுத்த பாட்டின் முதற் சொல்லும் ஒன்றாக அமையும் வண்ணம் பாடுவது. கந்தரந்தாதி வில்லிப்புத்தூராருடன் நடந்த வாதத்தில் அருணகிரிநாதர் பாடியவை: வாதிடும் சமயம், துவக்கம் முதல் ஐம்பத்துமூன்று பாடல்களுக்கு விளக்கமளிக்கிறார் வில்லிபுத்தூரார். ஐம்பத்து நான்காவது பாடலுக்கு உரைகூற இயலாததால் வாதில் தோற்கிறார். பிற புலவர்களை வாதில் வென்று, தோற்றவரின் காதுகளை அறுத்த வில்லிபுத்தூர் ஆழ்வாரே விளக்கம் கூற இயலாது வியக்க வைத்த பாடல் பின்வருமாறு:

"திதத்தத் தத்தித்த திதிதாதை தாத தூத்தித் தத்திதா
திது தத்தத்தித் ததி தித்தத்ததே துத்து தித்தி தத்தா
திதத் தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாதத்து
திதத் தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே"

இந்நூல் காப்புச் செய்யுட்கள் இரண்டையும் சேர்த்து 102 செய்யுட்களை உடையது. காப்புச் செய்யுட்கள் இரண்டைத் தவிர ஏனையனவை சி, சீ, செ, சே, தி, தீ, தெ, தே என்ற எட்டெழுத்துக்களை முதல் எழுத்துக்களாப் பெற்றவை அந்தாதித் தொடையமைப் பாடப் பெற்றவை.
கந்தரந்தாதியில் உள்ள பாடல்களில் படிப்பவரைக் கவருவது பின்வரும் பாடல் :

"சீகர சிந்து ரவுத்தவெஞ் சூர ஜெய புயவ
சீகர சிந்துர வல்லிசிங் கார சிவசுத
சீகர சிந்துர கந்தர வாகன் சிறைவிடுஞ்சு
சீகர சிந்துர மால்வினைக் குன்றைச் சிகண்டிகொண்டே"

இந்தப் பாடலின் விளக்கம் பின்வருமாறு:
சமுத்திரத்தில் சூரனை சங்கரித்தவனே,
அழகிய தோள்களை உடையவனே,
சிவ மைந்தனே, வள்ளி மணாளனே,
அக்கினியின் கையில் இருந்தவனே,
இந்திரனின் சிறையைக் களைந்த பரிசுத்தனே,
நீ மயிலேறி வந்து என்னுடைய பூர்வ வினையாகிய குன்றை பொடி செய்ய வேண்டும்.
கந்தனுக்கு அந்தாதி தந்த சந்தக் கவி வேதாந்த சித்தாந்த சமரச வித்தகர் அருணகிரிநாதரின் அரிய நூலாம் கந்தரந்தாதியை அனுதினமும் ஓதிப் பயன்பெறுவோமாக.

# நலமான வாழ்வுக்கு நயமான திருப்புகழ்!



சிவனை வழிபடுவோர்க்கு முதல்நூல் தேவாரம் - திருவாசகம். அதுபோல் சிவன் மகனை வழிபடுவோர்க்கு முதல் நூல் திருப்புகழ்!

நமது வாழ்வு வளம் பெற்று உய்ய அருணகிரிநாதர் பல்லாயிரம் பாடல்களை முருகன் மீது பாமாலைகளாகச் சூட்டி மகிழ்ந்தார்.

இன்றைய சூழலில் நமது வாழ்வு அனைத்து நிலைகளிலும் சிறந்தோங்க இளைய வாரியார் ஜோதி வேணுகோபால் சுவாமி அவர்களின் அருளாசியுடன் ஆறு திருப்புகழ் பாடல்களை இம்மலரில் வழங்கியுள்ளோம்.

**ஞானம் பெறுக : குழந்தைகள் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்க**

அறிவிலாப் பித்தர் உன்றன் அடிதொழாக் கெட்ட வஞ்சர்
அசடர்பேய்க் கத்தர் நன்றி அறியாத-
அவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகள் ஆக்கிப் புகழ்ந்து
அவரைவாழ்த் தித்தி ரிந்து பொருள்தேடிச்;

அனுபந்தம்

சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருஉலாத் தித்தி ரிந்து
தெரிவைமார்க் குச்சொரிந்து அவமேயான்-
திரியுமார்க் கத்து நிந்தை யதனைமாற் றிப்ப ரிந்து
தெளிய மோக்ஷத்தை என்று அருள்வாயே;
இறைவர்மாற் றற்ற செம்பொன் வடிவம்வேற் றுப்ப ரிந்து
இடபமேற் கச்சி வந்த உமையாள்தன்-
இருளைநீக் கத்த வஞ்செய் தருளநோக் கிக்கு ழைந்த
இறைவர்கேட் கத்த குஞ்சொல் உடையோனே;
குறவர் கூட்டத்தில் வந்து கிழவனாய்ப் புக்கு நின்று
குருவிஓட் டித்தி ரிந்த தவமானைக்-
குணமதாக் கிச்சி றந்த வடிவுகாட் டிப்புணர்ந்த
குமர கோட்டத்த மர்ந்த பெருமாளே.



குழந்தை பேறு குறைந்தவர்களுக்கு அறிவான, அழகான குழந்தை பிறக்க

திமிர உத்தி அனைய நரக
சென்னம் அதனில் விடுவாயேல்-
செவிடு குருடு வடிவு குறைவு
சிறிது மிடியும் அணுகாதே;
அமரர் வடிவும் அதிக குலமும்
அறிவு நிறையும் வரவேநின்-
அருள தருளி எனையு மனதொ
டடிமை கொளவும் வரவேணும்;
சமர முகவெல் அசுரர் தமது
தலைகள் உருள மிகவேநீள்-
சலதி அலற நெடிய பதலை
தகர அயிலை விடுவோனே;
வெமர அணையில் இனிது துயிலும்
விழிகள் நளினன் மருகோனே -
மிடறு கரியர் குமர பழநி
விரவும் அமரர் பெருமாளே.





சரணகம் லால யத்தை அரைநிமிஷ நேர மட்டில்
தவமுறை தியானம் வைக்க அறியாத-
சடகசட மூட மட்டி பவவினையி லேச னித்த
தமியன்மிடி யால்ம யக்கம் உறுவேனோ;
கருணைபுரி யாதி ருப்ப தெனகுறைஇ வேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே-
கடகபுய மீதி ரத்ந மணிஅணிபொன் மாலை செச்சை
கமழுமண மார்க டப்பம் அணிவோனே;
தருணம்இதை யாமி குத்த கனமதுறு நீள்ச வுக்ய
சகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு-
தகைமைசிவ ஞான முக்தி பரகதியும் நீகொ டுத்து
தவிபுரிய வேணும் நெய்த்த வடிவேலா;
அருணதள பாத பத்மம் அதுநிதமு மேது திக்க
அரியதமிழ் தான் அளித்த மயில்வீரா-
அதிசயம் அநேகம் உற்ற பழநிமலை மீது தித்த
அழக!திரு வேர கத்தின் முருகோனே.





## திருமணம் கைகூட; நல்ல வாழ்க்கைத் துணை அமைய

*விறல்மாரன் ஐந்து மலர்வாளி சிந்த
மிகவானில் இந்து வெயில்காய-
மிதவாடை வந்து தழல்போல ஒன்ற
வினைமாதர் தந்தம் வசைகூறக்:
குறவாணர் குன்றில் உறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீரக்-
குளிர்மாலை யின்கண் அணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ;
மறிமான் உகந்த இறையோன் மகிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா-
மலைமாவு சிந்த அலைவேலை அஞ்ச
வடிவேல் எறிந்த அதிதீரா;
அறிவால் அறிந்துன் இருதாள் இறைஞ்சும்
அடியார் இடைஞ்சல் களைவோனே.
அழகான செம்பொன் மயில்மேல் அமர்ந்து
அலைவாய் உகந்த பெருமாளே.





## தீராத நோய் தீர்க்க; உடல் நலம் செழிக்க

தலைவலி மருத்தீடு காமாலை சோகைசுரம்
விழிவலி வறட்சூலை காயாசு வாசம்வெகு
சலமிகு விஷப்பாக மாயாவி காரபிணி அணுகாதே-
தலமிசை அதற்கான பேரோடு கூறிஇது
பரிகரி எனக்காது கேளாது போலும்அவர்
சரியும்வயதுக்கேது தாரீர்சொலீர்எனவும்
விதியாதே;
உலைவற விருப்பாக நீள்காவின் வாசமலர்
வகைவகை எடுத்தே தொடாமாலி காபரணம்
உனதடியி னிற்சூட வேநாடு மாதவர்கள் இருபாதம்-
உளமது தரித்தே வினாவோடு பாடிஅருள்
வழிபட எனக்கே தயாவோடு தாள்உதவ
உரகம தெடுத்தாடு மேகார மீதின்மிசை வரவேணும்;
அலைகடல் அடைத்தே மகாகோர ராவணனை
மணிமுடி துணித்தாவி யேஆன் ஜாநகியை
அடலுடன் அழைத்தேகொள் மாயோனைமாமன்எனுட
மருகோனே-
அறுகினை முடித்தோனை ஆதாரம் ஆனவனை
மழுஉழை பிடித்தோனை மாகாளி நாணமுனம்
அவைதனில், நடித்தோனை மாதாதை யேஎனவும்
வருவோனே;
பலகலை படித்தோது பாவாணர் நாவில்உறை
இருசரண வித்தார! வேலாயுதா உயர்செய்
பரண்மிசை குறப்பாவை தோள்மேவ மோகம்உறு
மணவாளா-
பதுமவய விற்பூக மீதே வரால்கள் துயில்
வருபுனல் பெருக்காறு காவேரி சூழவளர்
பழநிவரு கற்பூர கோலாக லா!அமரர் பெருமாளே.



## புதுமனை வேண்டுவோர்க்கு விரைவாக நல்ல மனை அமைய



அண்டர்பதி குடியேற மண்டசுரர் உருமாற
அண்டர்மன மகிழ் மீற அருளாலே-
அந்தரியொ டுடனாடு சங்கரனு மகிழ்கூர
ஐங்கரனும் உமையாளு மகிழ்வாக,
மண்டலமு முநிவோரும் எண்டிசையில் உளபேரும்
மஞ்சினனும் அயனாரும் எதிர்காண-
மங்கையுடன் அரிதானும் இன்புமுற மகிழ்,கூற
மைந்துமயி லுடன் ஆடி வரவேணும்·
புண்டரிக விழியாள அண்டர்மகள் மணவாள
புந்திநிறை, அறிவாள உயர்தோளா-
பொங்குகட லுடன்நாகம் விண்டுவரை இகல்சாடு
பொன்பரவு கதிர்வீசு வடிவேலா;

தண்டரள மணிமார்ப செம்பொன் எழில் செறிரூப
தண்டமிழின் மிகுநேய முருகேசா-
சந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான
தண்சிறுவை தனில்மேவு பெருமாளே.

இவ்வாறு தேனினும் இனிய திருப்புகழ் பாடல்களை காலை மாலை பொருள் உணர்ந்து ஓதுவார்க்கு முருகப்பெருமான் அனைத்து நிலைகளிலும் அருள்புரிந்து வாழ்வில் இன்பம் தருவார்!

"ஆடும் பரிவேல் அணிசே வல்எனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே (க.அநு)

"குமரா முருகா குக ஓம் சரணம்"

ஈப்போ அருணகிரிநாதர் மன்றம்
தொகுப்பு உதவி: இரத்தின. மனோகரன்



# தனிப்புகழ்

**ஆக்கம் - கவிஞர் கண்ணதாசன்**



செவ்விய தமிழினிற்
சிந்து பயின்றவன்
ஒவ்வொரு சொல்லையும்
உருக்கிப் படைத்தவன்
கவ்வி இழுத்திடும்
கவிதையில் வல்லவன்
எவ்விதம் அன்னவன்
ஏற்றம் இயம்புவேன்!

திருப்புகழ் நூலினிற்
தனிப்புகழ் கொண்டவன்
பரம்பொருள் தம்மையும்
பக்தியில் வென்றவன்
அறப்பொருள் சொல்வதில்
அன்னையின் மேலவன்
'இருப்பது பொய்'யென
அறிந்தே இருந்தவன்!

சொல்வளம் கொள்வதில்
தோன்றாத் துணையவன்
பல்வளம் பெருகிடும்
பாடல் வகுத்தவன்
நல்மனம் யாவையும்
நாடும் திறத்தவன்
வல்வினை வென்றவன்;
வாழ்ந்தும் பயின்றவன்!

அருணகிரி எனும்
அடியவன் திருப்பெயர்
உரைக்கும் மனங்களில்
உள்ளொளி பாயுமே!
இருளும் ஒளியென
ஏற்றம் படைக்குமே!
மருளும் மனங்களில்
மயக்கம் துடைக்குமே!

அன்னவன் பெருமையை
அறிந்த ஒருசிலர்
முன்னவன் பணிசெய
முனைந்து நின்றனர்
என்னிவர் பெற்றதோர்
இன்பப் பேறுகள்
பன்னெடும் நாளவர்
பக்தியில் வாழ்கவே!

**(அருணகிரிநாதர் 600-வது பிறந்தநாள் விழா மலருக்கு எழுதப்பட்டது)**
**கவிஞர் கண்ணதாசன் கவிதைகள்**
**ஆறாது தொகுதி**



# எங்களின் நெஞ்சார்ந்த நன்றி மலர்கள்

இளைய வாரியார் ஜோதி வேணுகோபால் சுவாமிகள், தமிழகம்

கலைமாமணி முனைவர் சாரதா நம்பி ஆரூரன், தமிழகம்

தமிழ்க்காவலர், நற்பணிச் செம்மல் டத்தோ லெ. தமிழ்ச்செல்வன்

மாண்புமிகு மு. குலசேகரன், ஈப்போ பாராட் நாடாளுமன்ற உறுப்பினர்

அருள்மிகு தண்டாயுதபாணி கோவில் நிர்வாகத்தினர் ஈப்போ (நகரத்தார் பெருமக்கள்)

அருணகிரிநாதர் சிலை அன்பளிப்புச் செய்த
கிள்ளான் நாக. கணேசன் செட்டியார் குடும்பத்தினர்

ஒலி-ஒளி, மேடை அலங்காரத்திற்கு அன்பளிப்புச் செய்த
திரு. இளங்கோ - புனிதவதி குடும்பத்தினர்

மதிய உணவு வழங்கிய திரு. சிங்காரம் (சிங்காரம் ஸ்டோர்ஸ், ஈப்போ)

ஈப்போ நாட்டியக் கலாஞ்சலி நடனப்பள்ளி, ஆசிரியை & மாணவிகள்

திருப்புகழ் பாடல்கள் பாடிய திருமதி ஷோபனா ஜெகதீஸ்வரன்,
தொண்டர்மாமணி திருமதி ருக்குமணி கிருஷ்ணசாமி குழுவினர்

இசைக்கச்சேரி வழங்கிய செல்விகள் பண்பரசி, கனிமொழி கோவிந்தசாமி குழுவினர்

திரு. சுபேன் சிங்கம் மற்றும் நாதஸ்வர மேள இசைக் கலைஞர்கள்
மலருக்கு சிறப்பு கட்டுரைகளை வழங்கிய எழுத்தாளர் பெருமக்கள்

காலை உணவு வழங்கிய திரு. தனபால், திரு. சுப்ரமணியம்
(கணேத்தா பொட்டோ ஸ்டுடியோ)

திருமுருக மா. திருநாவுக்கரசு சித்தியவான், திரு. லெட்சுமணன், புந்தோங்,
திரு. **MCIS** கோவிந்தராஜு, திரு. சாத்தப்பன், ஈப்போ

தாளிகை நிருபர்கள், தமிழ் நேசன், மலேசிய நண்பன்,
மக்கள் ஓசை, **Minnal FM**, வார/திங்கள் இதழ்கள்

மற்றும் இவ்விழா சிறக்க அனைத்து நிலைகளிலும் பாடாற்றிய
அனைத்து நல்லுள்ளங்களுக்கும்இவ்வேளை எங்களின் நெஞ்சார்ந்த
நன்றி மலர்களை சமர்ப்பிக்கின்றோம்.

இவ்வண்ணம்
அருணகிரிநாதர் விழா **2012**
ஏற்பாட்டுக்குழுவினர்

ஆறெழுத்து மந்திர நாதராகிய ஆறுமுகப் பெருமான் சிவபெருமானின்று வேறல்லர். முதற்பொருளும் பரம் பொருளுமாவார். உலகம் உவக்குமாறு குன்று தோறும் கோயில் கொண்டு எழுந்தருளி நாடிவருவோரின் அன்பைப் பெற்றுக் கொண்டு அருளையும், பொருளையும் வாரிவழங்கும் கருணை வள்ளல். இத்தகைய பெருமானை,



"சேவலங்கொடியோன் காப்ப ஏமவைகல்
எய்தின்றால் உலகே"

என்று குறுந்தொகையும்

"..... ..... ..... தாழ்நீர்
வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலை இயகாமர் வியன்துறை"

என்று மதுரைக்காஞ்சியும்

"குன்று தோறாடலும் நின்றதன் பண்பு"

என்று திருமுருகாற்றுபடையும் சிறப்பிக்கின்றன. அவ்வகையில் முருகனின் தோற்றம், தோற்றத்திற்கான காரணம், வடிவம், தொன்மை, ஐந்தொழில்கள், திருமணத் தத்துவத்தையும் கீழ்க்கண்டவாறு காணலாம்.

**முருகனின் தோற்றம்:-**

முன்னோர்கள் ஒருருவம், ஒரு வடிவம், ஒரு குணம் என்று இல்லாத சிவனது நெற்றிக்கண்களிலிருந்து தோன்றிய முருகப் பெருமானை, எண்ணற்ற பெயர்கள் சூட்டி வழிபட்டு வந்துள்ளனர். சிவபெருமான் தனது ஐந்து முகங்களோடு அதோ முகத்தையும் சேர்த்து ஆறுமுகங்களின் நெற்றிக் கண்களிலிருந்து தோற்றுவித்த தெய்வக் குழந்தையே முருகப்பெருமான். இவ்வுண்மையைக் கச்சியப்பரின் கந்தபுராணம், குமரகுருபரரின் கலிவெண்பா, அருணகிரிநாதர் போன்ற அருள் நூல்களின் வாயிலாகவும் அறியலாம். அவை சானம், தத்புருடம், அகோரம், வாமதேவன், சத்யயோஜாதம் என்பன. அவனது சக்தியாகிய உமையவளுக்கு முகம் ஒன்று உண்டு. அஃது கிழ்நோக்கிய முகம் (அதோமுகம்) இதனையும் சேர்த்து ஆறுமுகங்கள் அம்மையப்பருக்கு. இந்த ஆறுமுகங்களிலும் உள்ள ஆறு நெற்றிக் கண்களிலிருந்து தோன்றிய ஆறு அக்னிப் பொறிகளுமே ஆறுமுகப் பெருமானின் திருவுருவாயின. இப்பொறிகள் ஐம்பூதங்களாகிய நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகியவற்றிடம் சென்றடைந்தன. ஆனால் அளப்பரிய வெம்மையைத் தாங்க இயலாத நிலையில் ஐந்தாவது பூதமாகிய நிலப்பரப்பில் தர்ப்பைப்புல் நிறைந்த ஒரு பொய்கையில் சிவபெருமானின் ஒளிமயமான ஆறுசுடர்களும் சேர்ந்தவுடன் சுந்தர வடிவம் பெற்று ஆறு அழகிய குழந்தைகளாக மாறின என்று முருகனது தோற்றம் பற்றி புராணங்கள் சுட்டுகின்றன.

## கங்கைபோல் அருள்பொழிய நம்மிடையே வந்தான்!

காப்பியக் கவிஞர் நா. மீனவன்
கண்டர மாணிக்கம், தமிழ்நாடு



பேராக்காம் மாநிலத்தில் ஈப்போவாம் மாநகரில்
பேசுதமிழ் அருணகிரி மன்றமிது கண்டு
சீராக்கி மூன்றாண்டு விழாக்காணும் நன்னாள்
செயபாலன் தலைவரென முன்னிருந்து செல்லத்
தேராக்கி நடத்துகிற திருநாளில் அன்பு
திகழ்தண்டா யுதபாணி திருத்தாள்கள் போற்றி!
கூராக்கி வைத்தவடி வேலுடைய கந்தா
கொடுத்திடுக நல்லருளை எனவாழ்த்தும் பாட்டு!

தத்திவரும் மயிலுடையாய் தண்டைபுனை வீரா!
தாமரைப்பூச் சேவடியை யார்மறப்பார் இன்று
முத்திவரும் கடல்சூழ்ந்த பூமியிலே வாழும்
முதல்வாஉன் திருப்புகழைத் தமிழ்மறைகள் பேசும்
சித்தமது களிக்கவெனப் பழனிமலை ஏறும்
சிவனாண்டி பெற்றமகன் இவனாண்டி என்று
பத்தியுடன் பணிக்கின்றேன் பாகுமலர் காப்பு!

சங்கமெனும் தமிழறிந்தார் சபையினிலே ஏறிச்
சால்புடைய செய்தமிழ்சொல் நக்கீரன் பாட்டில்
பொங்கிவரும் புத்துயிரைத் தந்துமகிழ் கந்தா
புகழ்சொல்ல வேண்டுமென அருணகிரி வேண்டித்
தங்கமலர் தெய்வானை வள்ளியம்மை என்னும்
தையலர்கள் இல்லாமல் நம்தண்ட பாணி
கங்கைபோல் அருள்பொழிய நம்மிடையே வந்தான்
காக்கட்டும் அவனென்று வாழ்த்துகிறேன் வாழ்க!

# அருணகிரிநாதர் விழா 2012
## ஏற்பாட்டுக் குழுவினர்



**இடமிருந்து வலம் :**

திரு. புஷ்பநாதன், திரு. ஆனந்தன், திரு. முருகப்பன். திரு. வே. மகேந்திரன், திரு. இரா. தமிழரசன், டாக்டர் வ. ஜெயபாலன்,
திரு. த. நாகராஜன், திரு. சம்பந்தன் செட்டியார், திரு. சாத்தப்பன், திரு. கிருஷ்ணசாமி, திருமதி ருக்குமணி கிருஷ்ணசாமி.

**படத்தில் இடம் பெறாதவர்கள் :**

திரு. இரத்தின. மனோகரன், திரு. சொ. தண்ணிமலை, திரு. மணிவண்ணன், செல்வி விக்னேஸ்வரி, திருமதி கீதா ஜெயபாலன்
திரு. ஆ. வாசு, செல்வி தேவி